### கவிச்சக்கரவர்த்தி

# கம்பரின்

## வாழ்வும் - வரலாறும்





அருட்கவிஞர் அ.காசி

கம்பன் பதிப்பகம் - வேலூர்

புதுச்சேரி நகர் மன்றத்தில், கம்பர் சிலை முன் அருட்கவிஞர் அ.காசி மற்றும்
வேலூர் கம்பன் கழகத் தலைவர் கம்பர் பித்தன் S.N.குப்புசாமி முதலியார்

அருட்கவிஞர் அ.காசி அவர்களின் 66வது நூல் வெளியீட்டு விழாவில்
புதுவை முதல்வர் வெ.வைத்தியலிங்கம், அமைச்சர் கந்தசாமி,
நீதியரசர் எஸ்.நாகமுத்து மற்றும் நகர்மன்றத் தலைவர் ஸ்ரீதேவி.

# கவிச்சக்கரவர்த்தி கம்பரின் வாழ்வும் - வரலாறும்



அருட்கவிஞர் அ. காசி., எம்.ஏ., எம்.எட்.,

**கம்பன் பதிப்பகம்**
4-A, சாரதி மாளிகை, ஆபிசர்ஸ் லைன்,
வேலூர் - 632004

முதற்பதிப்பு : மே, 2011



புதுவை கம்பன் விழா நிகழ்ச்சியில் 6-5-2011 அன்று புதுச்சேரியில் வெளியிடப்பட்டது.

**விலை ரூ. 50.00**

- Title : **KAVICHAKRAVARTHI KAMBARIN VAZHVUM VARALARUM**
- Author : Arutkavignar A. KASI, M.A., M.Ed.
- Language : Tamil
- Subject : Literature
- Edition : First Edition : May, 2011
- Size : Crown 1 × 8
- Pages : xvi + 96 = 112

- Published by : **KAMBAN PATHIPPAGAM**
  4/A, Sarathy Mansions.
  Officers line, Vellore - 632 004

- PRICE : **Rs. 50.00**

---

**Laser typest at : LaserLink Systems, Chennai-17. Ph. 044-42127214**

*Printed at :* **NOVENA OFFSET PRINTING CO., Chennai - 5 ✆ 28446166, 28446891**



கம்பர் பித்தன்
வேலூர் எஸ்.என். குப்புசாமி முதலியார்
தலைவர்: கம்பன் கழகம்
உரிமையாளர் : கம்பன் பதிப்பகம், வேலூர்

---

## வெளியீட்டுரை

**வே**லூர் கம்பன் கழகம், கடந்த முப்பத்துநான்கு ஆண்டுகளாகக் கம்பன் புகழ்பாடி, கன்னித் தமிழ் வளர்த்து அரும்பணி ஆற்றிவருகிறது.

கம்பனைக் கற்றுத் துறைபோய, அறிஞர்களை அழைத்துச் செவி நுகர்க் கனிகளை ஆண்டுதோறும் கம்பன் விழாநடத்தி — வழங்கிடச் செய்வதோடன்றி, கண்வழி நுழைந்து, மனத்தினில் நிறைந்து என்றென்றும் சிந்தனையைத் தூண்டும் தேனடைகளென நூல் வெளியிடுவதையும் தனது கடமையாக மேற்கொண் டுள்ளது.

அந்த வகையில் வேலூர் கம்பன் கழகம் வேலூர் கம்பன் பதிப்பகத்துடன் இணைந்து கம்பன் நூற்பணியாகக் கம்பனைப் பற்றிய பல நூல்களை எழுதித் தரும்படியாக வேண்டுகோள் விடுத்து, அதன் விளைவாகக் கிடைக்கப்பெறும் நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டும், அந்த நூல்களை புதுவை, காரைக்குடி, வேலூர், தேரழுந்தூர் மற்றும் பிற ஊர்களில் நடைபெறும் கம்பன் விழாக்களின்போது அறிமுகம்

செய்வித்தும் வெளியிட்டும் அரும்தொண்டு புரிந்து வருகிறது.

'கவிச்சக்கரவர்த்தி கம்பரின் வாழ்வும் — வரலாறும்' என்கிற இந்த நூலின் ஆசிரியர் அருட்கவிஞர் அ. காசி அவர்கள், அருப்புக்கோட்டை கம்பன் கழகத்தின் ஆணிவேராய், ஆதார சுருதியாய் அனைத்துமாய் திகழும் மனிதநேயமாமணி டாக்டர் டி.ஆர். தினகரன் அவர்களுடன் இணைந்து அருப்புக்கோட்டை கம்பன் கழகத்தின் செயலாளராக மிகச் சீரிய முறையில் தொண்டாற்றி வருகிறார்.

கம்பரை அனைவரும் கவிச்சக்கரவர்த்தியாய் போற்றி வருகையில், இவர் கம்பனைக் கவிதைக் கடவுளாகவே போற்றி வருபவர் ஆவார். இவர் பேச்சு, மூச்சு, நினைவு யாவுமே கம்பரைப்பற்றியே இருப்பதைக் காணமுடிகிறது. கம்பன் புகழ் பாடி, கன்னித்தமிழ் வளர்க்கும், கம்பர் சீர் பரவும், தலையாய கம்பரசிகர் ஆவார்.

அருட்கவிஞர் அ.காசி அவர்கள் கம்பரைப் பற்றி இதுவரை ஒன்பது நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள் ஐந்து நூல்கள் எம் பதிப்பகத்தின் மூலம் வெளியிட்டுள்ளோம் இப்போது வெளியிடப்படும் நூல் எம் பதிப்பகம் மூலம் வெளியிடும் ஆறாவது நூலாகும். கம்பரைப்பற்றி மேலும் நூல்கள் பல எழுதி வெளியிடவேண்டும் என்பது அவரது தணியாத, வற்றாத விருப்பமாகும்.

அபிதான சிந்தாமணி — விநோதரச மஞ்சரி — மற்றும் கம்பரைப்பற்றி அவ்வப்போது வெளியான

குறிப்புக்கள்,கம்பரைப்பற்றிய நாடகநூல்,கம்பரைப்பற்றி வாழ்க்கை வரலாறு எழுதிய காஞ்சிபுரம் மருத்துவர் ம. வரதராசனார் நூலில் காணப்பெறும் செய்திகள் யாவுமாகச் சேகரித்து ஒரு முழுமையான கம்பர் வாழ்க்கைப் பற்றிய இந்நூலை மிகுந்த ஆர்வத்துடனும் பக்தி சிரத்தையுடனும் வெளியிட்டுள்ளார். அவரே கம்பரைப்பற்றிய வரலாறு — கவினுறு நிகழ்ச்சிகள் பற்றி நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார்.

அவரது சலியாத உழைப்பும் ஈடுபாடும் எம்மையே மிகவும் பிரமிக்க வைக்கிறது. கம்பரின் பிறநூல்களைப் பற்றியும் எழுதிட உள்ளார் என அறிகிறோம்.

கம்பர் படைப்பு பற்றியும் ஆய்வுநூல் எழுத அவர் முனைந்து செயல்பட விரும்புகிறோம். அடுத்த நூல்களையும் நாங்கள் வெளியிடும் பேற்றினை வழங்கிடுவார் என நம்புகிறோம்.

இந்நூலினை, புதுவைக் கம்பன் விழாவின் போது — புதுவையில் வெளியிடும் பெரும் பேற்றினை நல்கி எங்களைப் பெருமைப்படுத்திய கம்பர் சீர்பரவுவார் — கம்பகாவலர் — புதுவைக் கம்பன் கழகத்தின் ஆற்றல் மிகு செயலர், மூத்த வழக்கறிஞர் தி. முருகேசன் அவர்களுக்கு நாங்கள் என்றென்றும் நன்றிக்கடன் பட்டவர்களாவோம்.

புதுவையில் கம்பர் விழா — மிகவும் கோலாகல மாக — எடுப்பாகவும் மிடுக்காகவும் யாவரும் பிரமித்து ஒருமித்து பாராட்டும் வகையில் நடைபெற்று வருவதை தமிழ் கூறும் நல்லுலகம் — கம்பரசிகர்கள் அறிந்த உண்மை. புதுமையில் நடைபெறும் கம்பன் விழாவுக்கு

புதுவை அரசின் பங்கேற்பும் ஈடுபாடும் போற்றி வியப்புறும் வகையில் முழுவதுமாய் திகழ்வதை யாவரும் அறிவர். அது கம்பன் கழகம் நடத்தும் விழாவாக அல்லாமல் அரசின் விழாவாகவே பரிணமிப்பதை யாவரும் அறிவர். அப்பேர்ப்பட்ட அரசு விழாவில் அரசு மரியாதையுடன் இந்நூல் வெளியிடப்படும் பேற்றினை நல்கிய புதுவை கம்பன் கழகத் தலைவர் உள்ளிட்ட நிர்வாகிகளை வணங்கி மகிழ்கிறேன்.

இந்நூலினை வடிவாக்கி, அச்சிட்டு, நேர்த்தியாக மிகச்சிறப்பாக வெளிக்கொணர உறுதுணையாக இருந்த வானதி பதிப்பகத்தின் அதிபர் பதிப்புத்துறை பகவலன் வானதி திருநாவுக்கரசு மைந்தர் திரு. டி.ஆர்.இராமநாதன் அவர்களுக்கு நாங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கம்பரசிகர்களும் தமிழ் இலக்கிய ஆர்வலர்களும் இதனைப் படித்து, கம்பரைப் பற்றி நாட்டில் முழுவதுமான ஓர் வரலாற்று நூல் இல்லாத நிலையில் ஓரளவுக்குச் செவி வழியாகவும், சிறு சிறு தகவல்கள், குறிப்புக்கள் வழியாகவும் பரவலாக அங்கும் இங்குமாக அறியப்பெறும் வரலாற்றுச் சுருக்கத்தை ஓரளவு மொத்தமாக அறிய முடியும். வாசித்து மகிழலாம்.

கம்பர் பித்தன்
வேலூர் எஸ்.என். குப்புசாமி



# வாழ்த்துரை

T.R. தினகரன்

சேர்மன், ஸ்ரீ ராமலிங்கா மில்ஸ் லிட்.,
அருப்புக்கோட்டை

ஆசிரியர் திரு. அ. காசி அவர்களை நீண்ட காலமாக நான் அறிவேன். அவருடைய எழுத்துப்பணி என்னை பலமுறை வியக்க வைத்திருக்கிறது. இவ்வளவு ஈடுபாடு இவருக்கு எப்படி சாத்தியமாயிற்று. கம்பனை வாசித்ததாலா? இல்லை கம்பன்மேல் கொண்ட ஈடு பாட்டினாலா? அவருடைய எண்ணங்கள் அனைத்தும் கம்பனாகத்தான் இருக்கிறது. பேனா பிடித்தால் சிலர் பிள்ளையார் சுழி போடுவார்கள். ஆனால் இவர் கம்பர் சுழி போட்டே அல்லவா கட்டுரைகள் எழுதுகிறார். இதுவரை கம்பன் கவித்துவத்தைப் பற்றி மட்டும் எழுதியவர் இப்பொழுது கம்பனின் குடும்ப வாழ்வையும் அவர் வாழ்வில் கண்ட பல இன்னல்களையும் அவர் சமாதி அடைந்த வரலாற்றையும் நமக்குத் திரட்டித் தந்துள்ளது கம்பனைப் போற்றுவோருக்குக் கிடைத்த மிகப்பெரிய பொக்கிஷமாகவே கருதுகிறேன்.

கம்பர் புகழ் பரப்பும் திரு. அ.காசி அவர்களின் தொண்டு மேலும் சிறக்கவும் அவருடைய எழுத்துப்பணி தொடரவும் என்னுடைய வாழ்த்துக்கள்.

T.R. தினகரன்



அருட்தமிழ் அமுது
**டாக்டர் தி. அருணாச்சலனார்**
செயலாளர் - மதுரை மாநகர மூத்தகுடி மக்கள் பேரவை

---

# தோரண வாயில்

கம்பா!
எம் உள்ளம் கவர் கள்வா
கார் மேகக் கவிஞனே
பார் நின்கவியில் நனைந்தோம்
ஊர் எங்கும் சொல்லுவோம்
நேர் இதற்கு இல்லையே
கூர் அதிகம் சுவையில்தான்
வேர் தந்த பழமப்பா
தேர் செய்வோம் உனக்கப்பா - எங்கள்
தினகரன் இருக்கிறார் கேளப்பா!

என்றே எந்நாளும் சங்கநாதம் முழங்கும் அருப்புக்கோட்டை கம்பன் கழகம் சார்ந்த அருட்கவி காசி அவர்களின் அறிவுசார் கட்டுரை நூல் இது.

நூல் செய்யும் மேலோர் பலரில் தனது 66வது நூலினை வெளியிட்டு காசி அவர்கள் செம்மாந்து நிற்கிறார்.

கம்பனைக் கற்றோர் பலர்
கம்பனைக் கற்பித்தோர் பலர்
கம்பனை ரசித்தோர் பலர்
கம்பனைத் துதித்தோர் பலர்

ஆனால், கம்பனின் குடும்ப வாழ்வைக் கண்கொண்டு பார்த்துக் களித்தவர் யார்?

காசி என்ற இக்கவிஞர், தான் அறிந்ததை இந்த தரணிக்குச் சொல்கிறார். கம்பரின் குடும்ப வாழ்வில் நிகழ்ந்த ஏற்றம், இறக்கம், மாற்றம் இவற்றை இந்த நூலில் காணலாம்.

கட்டிக்கரும்பாய் தொடங்கிய கம்பரின் குடும்ப வாழ்வு எட்டிக்காயாய் மாறிய நிகழ்வினை இந்நூல் கூறும். அமராவதியாம் அரசகுமாரி, அம்பிகாபதியின் இரண்டாவது மனைவியாக இணைந்திட விரும்பியது எத்தனை பேருக்குத் தெரியும்?

காப்புச் செய்யுள் கணக்கில் சேராது என்பது அம்பிகாபதிக்குத்தெரியும். ஆனால் அது அமராவதிக்குத் தெரியாதே! அதன் விளைவுதான் அம்பிகாபதியின் கொலை மற்றும் அமராவதியின் தற்கொலை.

தண்டியலங்காரம் யாத்திட்ட தண்டி என்பார் கம்பரின் பேரன்தான் என காசி உறுதி செய்கிறார்.

இராமாயணத்தை அரங்கேற்ற கம்பர் சந்தித்த துயரங்களைக் கவிஞர் சொல்லும்பொழுது.

கம்பர் பட்ட பாட்டை
கடையும் தயிர் படுமா?
கஞ்சிவரம் தறி படுமா?

எனச் சிந்திக்க வைக்கிறார் நூலாசிரியர்.

பல்லக்கில் சென்றே பழகிய கம்பர் கால்நடையாய் வந்து நாட்டரசன் கோட்டையில் அடங்கிய பாட்டரசன் என்பதை ஆசிரியர் விளக்குமிடம் கண்ணீரில் முடிகிறது.

இத்தனைச் செய்திகளை இந்த மனிதர் எப்படி சேகரித்தார்? பற்பல நூல் கற்ற பாவலராய் காசி காட்சி தருகிறார். இராமசரித்திரம் சொன்ன கம்பருக்கு சரித்திரம் அமைத்துள்ளார் அருட்கவி காசி. இராமனைப் பாடிடக் கம்பர் அவதரித்தார். கம்பரைச் சொல்லிட காசி வாழ்கிறார்.

'கம்பவதாரம்' என்ற கவிதை நூலினை காசி யாத்திட வேண்டும். அதைப் படித்து நாம் இன்புற வேண்டும் என்பதே என்போன்றோர் அவா.

சந்தப் பா என்பது சொந்தப் பா என்றாலும் எந்தப் பாவும் காசிக்கு உகந்த பா என்பதால் விருத்தத்தில் உயர் கம்பனை வழுத்துவோம் காசியின் சுந்தரப் பாவில்.

இராமநாம மகிமையால் இந்தக் கனவு மெய்ப்படல் வேண்டும். கடைக்கோடித் தமிழனும் கம்பனின் கவிதையை மட்டுமல்ல, அவரது குடும்ப சோகத்தையும் அறிய வேண்டும் என்பதே ஆசிரியரின் உள்ளக்கிடக்கை.

> "காசியே, நீ
> யோசித்து எழுதும்
> நூல்கள் யாவும்
> யாசித்தும் வாசிக்கத்
> தக்கவை"

நன்றி, வணக்கம்.

கத்தங்குடி, அன்புடன்,
மதுரை. தி. அருணாசலம்



அருட்கவிஞர் அ. காசி,
செயலர், கம்பன் கழகம்
அருப்புக்கோட்டை

## என்னுரை

அறமே உருவான இராமபிரானின் புனித சரித்திரத்தைத் தமிழில் பாடியும், சைவ - வைணவப் பெரியோர்கள் ஏற்கும் வகையில் அரங்கேற்றம் செய்தும், கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டத்துடன், கம்ப நாட்டாழ்வார் என்ற பட்டத்தையும், கம்ப நாடர் என்ற பெயரும் பெற்றவர் கம்பர்.

கம்பர் உவச்சர் குலத்தில் பிறந்தவர். தேரழுந்தூரில் பிறந்தவர். கம்பனின் இளமைப் பெயர் ஏகம்பன். ஏழு வயதில் தந்தையை இழந்தவர்.

கம்பர் குருகுலத்தில் பயின்றவர். திருவாலி அமுதனாரிடமும் கவிவாண பண்டிதரிடமும் குருகுலக் கல்வியைப் பெற்ற கம்பர் — வடமொழிப் புலமையைத் திருவொற்றியூர் திருமயான மடத்தில் சதுரானன பண்டிதரிடம் கற்றுத் தேர்ந்தார்.

சடையப்ப வள்ளல் கம்பனின் அறிவாற்றலைச் சோதித்தறிந்தவர். சோழன் விஜயாலய சோழனிடம் கம்பரை அழைத்துச் சென்று அறிமுகம் செய்தார்.

கம்பருடைய தாய் திலகவதியார். தந்தை ஆதித்தனார். மனைவி நிகர்த்தவல்லி. மகன் அம்பிகா பதி, மகள் காவேரி, இவர்களின் வரலாற்றை அறிய இந்நூல் அரிய துணையாக உள்ளது.

கம்பர் நடத்திய பாட சாலையில் சோழ அரசனுடைய மக்களும், பல்லவ அரசனுடைய மக்களும், பாண்டிய அரசகுமாரர்களும் சேர்ந்து படித்தனர். இதனால் பின்னால் கம்பருடைய வாழ்க்கை பலவிதங்களிலும் இடையூறு ஏற்பதை அறிகிறோம்.

கம்பர் தன் மகன் முறையோடு வாழ்க்கை நடத்த முதல் திருமணத்தை நடத்தினார். அம்பிகாபதியின் முதல் மனைவி அருண்மொழியார். அவள் தன் கணவருக்குச் சுகத்தைக் கொடுத்து அருமையான மகனையும் உலகுக்குத் தந்தாள். அவர்களுடைய மகன் தண்டி என்பான் தமிழ் இலக்கண நூலைத் தந்ததை அறிகிறோம்.

அம்பிகாபதி முதல் மனைவியோடு நிறைவு பெறாமல் சோழ அரசனுடைய மகள் அமராவதியின் காதலையும் விடவில்லை. அமராவதியும் அம்பிகாபதி யுடன் வாழ்ந்து காட்ட எண்ணுகிறாள். இச்செயல் கம்பருடைய வாழ்க்கையையும் பாதிக்கிறது. அவர்களும் துன்பமடைகிறார்கள். அவர்களுடைய வாழ்க்கை, அழியாக் காதல் லைலா— மஜ்னு, ரோமியோ — ஜூலியட், அனார்கலி—சலீம் வாழ்வை விட உயர்ந்ததாக உள்ளது. இதை உலகம் அறியும்.

கம்பர் முதலில் ஏரெழுபது, திருக்கை வழக்கம், செம்பொற்சிலை மூன்று நூல்களையும் அரங்கேற்றினார்.

கம்பருடைய இராமாயணம் ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றப் படாத பாடுபடுகிறார் கம்பர். முதற்கண் சடகோபர் அந்தாதி அரங்கேற்றம் செய்தார். இராமாயணத்தை அரங்கேற்றிய பின் கவிச்சக்கரவர்த்தி பட்டத்தைப் பெறுகிறார். அதன்பின் தான் சடையப்பர், ஆதித்த சோழன் சபையில் இராமாயணத்தை அரங்கேற்றம் செய்வதை அறிகிறோம்.

கம்பர் மகள் காவேரியைக் கன்னரத்தேவன் மாளிகை வந்து இச்சைப்படுத்த எண்ணுகிறான். காவேரி கம்பங் குதிரினுள் விழுந்து உயிரை விடுகிறாள்.

கம்பர் தன் தாயாரை இழக்கிறார். மகனை இழக்கிறார். மகளை இழக்கிறார். மனைவியை இழக்கிறார். சோழ அரசனும் கம்பரை நாட்டை விட்டுப் போகும்படி பணிக்கிறார்.

மன சஞ்சலத்துடன் சோழ நாட்டை விட்டுப் புறப்பட்டு, பாண்டிய நாட்டை அடைந்து பின் சேர நாட்டை அடைகிறார். நல்ல வரவேற்பு கிடைக்கிறது. சரஸ்வதி அந்தாதியை சேரன் சபையில் அரங்கேற்றம் செய்தார். பத்மநாபபுரத்தில் புகழுடன் கம்பர் வாழ்வதை அறிந்த ஆதித்த சோழன், பராந்தகன் மூலம் சோழ நாட்டிற்கு வரும்படியாகப் பணிக்கிறார்.

இலங்கைப் பயணத்தை முடித்துப் பின் சோழ நாட்டை அடைகிறார் கம்பர். அங்கு சிலகாலம் வாழ்ந்து பின் பயணத்தைத் தொடங்கி இராமேஸ்வரம் வருகிறார். தீர்த்தங்களில் ஆடுகிறார். நாட்டரசங்கோட்டையில் சமாதி அடைந்தார் கம்பர். அவர் இயற்றிய நூல்கள்

18 ஆகும். ஒன்பது நூல்களைப் பற்றிய தெளிவான விளக்க வெளியீடுகளை அறிகிறோம்.

கம்பர் 9ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். 82 வயதில் சமாதியானார். கவிச்சக்கரவர்த்தியின் குடும்ப வரலாற்றைத் தனி நூலாக வெளியிட அரியதோர் வாய்ப்புக் கிடைத்தது, யான் பெற்ற பெரும் பேறாகும்.

நூல்வடிவமாக்கி வெளியிடப் பேருதவி செய்த வேலூர் கம்பன் பதிப்பக உரிமையாளர் கம்பர் பித்தன் S.N. குப்புசாமி முதலியாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் எனது 68வது படைப்பாகும். இந்நூலுக்கு பாராட்டுரை நல்கிச் சிறப்பித்துள்ள அரிமா, அருட்தமிழமுது டாக்டர் தி. அருணாசலனார் BVSC அவர்களுக்கும், வாழ்த்துரை நல்கிய அருப்புக்கோட்டை கம்பன் கழகப் புரவலரும், தலைவரும், கம்பர் மாமணியும், மனித நேய மாமணியும், ஆன்மீகச் செல்வருமாகிய டாக்டர் திரு. T.R. தினகரன் பி.இ., அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலை வெளிக்கொணர காஞ்சிபுரத்தைச் சேர்ந்த மருத்துவர் அமரர் உயர்திரு மா. வரதராசன் அவர்கள் எழுதிய 'கவிச்சக்கரவர்த்தி கம்பர் வாழ்க்கை வரலாறு' எனும் நூலே தூண்டுகோலாகவும் வழிகாட்டியாகவும் அமைந்தது.

அவர் எழுதிய தகவல்களின் அடிப்படையில் அவைகளை ஒற்றியும் இந்த நூலில் பல செய்திகளைக் கோடிட்டுக் காட்டியுள்ளேன் இதயபூர்வமாக.

அவருக்கு எனது ஆழ்ந்த நன்றியையும் அவரது முயற்சிக்கு எனது பாராட்டுகளையும் மரியாதை களையும் தெரிவிப்பதில் மனநிறைவு பெறுகிறேன்.

இந்நூல் வெளியீட்டின் மூலம் எனக்கு கிடைக்கக் கூடிய வருவாயினை அமரர் மருத்துவர் மா. வரதராசன் மேற்கொண்டு துவக்கி இப்போது கட்டுமானப் பணிகள் நடந்துக் கொண்டிருக்கும் கம்பர் கோட்டம் — கோயில் பணிகள் பூர்த்தியாக உதவிடும் வகையில் சமர்ப்பிக்க எதிர்நோக்கியுள்ளேன்.

நன்றி — வணக்கம்.

*25. அண்ணாமலை நாடார் தெரு,*
*அருப்புக்கோட்டை—626101.*

அன்புள்ள
அருட்கவிஞர் அ.காசி,

# கவிச்சக்கரவர்த்தி கம்பரின் வாழ்வும் - வரலாறும்

### தஞ்சையின் சிறப்பும் தேரழுந்தூரின் பெருமையும்

சோழநாடு சோறுடைத்து என்று அவ்வையார் பாடியுள்ளார். சோழநாட்டில் நீர்வளமும் நிலவளமும் பொருந்தியது தஞ்சையாகும். நீர்வழியும் கழனியிலே மீன்கள் துள்ளும். நெற்கதிர்கள் சாய்ந்தாடிக் கொஞ்சும் காட்சி, காவேரி நீரோட்டம் கண்கொள்ளாக் காட்சி.

### புராணத்தில் தேரழுந்தூர்

தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறையிலிருந்து பூங் குடந்தை செல்லும் சாலையில் ஐந்து மைல் தூரத்தில் உள்ளது பாலசேந்திரபுரம் ஆகும். அங்கிருந்து தெற்கே இரண்டு மைல் தூரத்தில் உள்ளது தேரழுந்தூர் ஆகும்.

தேரழுந்தூர் புராண சிறப்புடையது. உபரி சரவகன் என்னும் அரசன் தன் தவபலத்தினால் வான ரதத்தில் தன் தேவியோடு பவனி வந்தான். அப்போது "பூமியில் கோபுரத்தோடு கோயில் கொண்ட திருமாலைத் தரிசித்துச் செல்வோம்" என்று தேவி கூறினாள். உடனே "அரசனாகிய என்னை விடவா அந்தக் கண்ணன் உயர்ந்தவன்?" என்று கூறி ஏளனத்துடன் மனைவியைப் பார்த்தான் மன்னன். திருமால் அருகே இருந்த கருடாழ்வார், மன்னன் கூறியதைக் கேட்டு, கோபங்கொண்டு சிறகடித்து பறந்து வந்து வானில் சென்று கொண்டிருந்த தேரில் மோதியது. உடனே

தேரானது கீழே குளத்தில் விழுந்து அழுந்தியது. தேர் குளத்தில் விழுந்து அழுந்தியதால் அவ்வூர் தேரழுந்தூர் எனப் பெயர் பெற்றது.

## இலக்கியத்தில் தேரழுந்தூர்

முற்காலத்தில் தேரழுந்தூர் சோழநாட்டில் தலை நகரமாகத் திகழக் கண்டோம். முதற் கரிகாலன் தன்னை எதிர்த்த சேரனையும், பாண்டியனையும், பதினொன்று குறுநில மன்னர்களையும் ஒருங்கே வெண்ணிப் பறந்தலை என்ற ஊரில் வென்று வெற்றி பெற்றான். இரண்டாம் கரிகாலன் சோழநாட்டின் தலைநகரை உறையூருக்கு மாற்றினான். மூன்றாம் கரிகாலன் தாய்மாமன் இரும்பிடர்த்தலையார் அருந்தமிழ்ப் புலவராவார்.

புராண இலக்கிய வரலாற்றோடு, காவிய சிங்கமான தெய்வமாக்கவி, கவிச்சக்கரவர்த்தி கம்பர் அவதாரம் செய்த சிறப்பும் உடையது தேரழுந்தார் ஆகும்.

## உவச்சர் ஆதித்தரின் ஆன்மீகத் தொண்டு

தேரழுந்தூர் சதுர வடிவமாக அமைந்த ஊராகும். கிழக்குப்புறமான வீதியைத் தொடர்ந்து, தென்பகுதி வீதியே பிரதானமாகக் காட்சியளிக்கும். அதன் குறுக்கேயும் வீதிகள் உள்ளன. தெற்கு வீதி இரு மருங்கிலும் ஓரிரு படிகள் உயரத்தில் கம்பீரமாக வீடுகள் காட்சியளிக்கின்றன.

தெற்கு நோக்கிய விசாலமான சந்தில் உள்ள சாதாரண வீட்டில் வாழ்ந்தவர் தான் ஆதித்தர் என்னும்

அர்ச்சகர் ஆவார். உவச்சர் குலத்தவர். காளிகோவில் பூசைப் பணியாளர். அவருடைய மனைவி திலகவதி ஆவாள். ஆதித்தார் அனுதினமும் பக்கத்திலுள்ள சேத்திர பாலபுரம் சென்று அங்கு எழுந்தருளியுள்ள தேவதை செல்லியம்மன் கோவிலில் பூஜை நடத்துவார். பின் திரும்பி தேரழுந்தூர் வந்து தன் வீதியில் உள்ள விநாயகர் கோவில் பூஜையை நடத்துவார். அடுத்து பக்கத்தில் மேற்கே உள்ள காளியம்மன் கோவில் பூஜையை நடத்துவார். பின் வீடு திரும்புவார். இது அவருடைய வழக்கமான பணியாகும். கூடவே பயிர்த்தொழிலும், கைத்தொழிலும் மேற்கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தார்.

அர்ச்சகர் ஆதித்தர் மூன்று கோவில்களிலும் பயபக்தியுடன் பூஜை நடத்துவார். மூன்று கோவில் களுக்கும் மானியம் நிலங்கள் உண்டு. ஊர்ப் பெரியோர் களின் தயவால் கௌரவமாக ஆதித்தர் மதிக்கப் பெற்றார். நாட்டாமை நல்லமுத்து, வைத்தியர்கள், மருத்துவச்சிகள், சோதிடர்கள் அவருடைய திறத்தைப் போற்றி பொருளுதவியும் செய்து வந்தனர்.

### கம்பன் அவதாரம்

திலகவதி கர்ப்பமுற்றாள். மருத்துவச்சி தானாகவே வந்து திலவதியார்க்கு வேண்டிய உதவி களைச் செய்தார். கர்ப்பிணி திலகவதியார்க்கு பத்து மாதம் அன்று ஆதித்தர் அதிகாலை பூஜைக்குப் புறப்பட்டார். கீழ்த்திசையில் சுக்கிரன் உச்சியை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட ஆதித்தர் வியப்புற்றார். உலகப்புகழ் பெறும் உத்தமன்

எங்கோ தோன்றியிருக்கிறான் என்பதை அறிந்து வீடு திரும்பினார். சித்தார்த்தி வருடம் சாலிவாகன சகாப்தம் 762ம் ஆண்டு (கி.பி. 840ல்) கவியோக சுபதினத்தில் ஆதித்த அர்ச்சகருக்கும், திலகவதி அம்மைக்கும் ஆண் குழந்தை பிறந்தது. ஆதித்த அர்ச்சகர் மட்டுமல்ல, ஊரே போற்றும் நிலையில் ஆண் குழந்தை பிறந்தது.

சோதிடர் ஆண்குழந்தையைக் கண்டு, கணித்துப் பார்த்து ஏகம்பன் என்ற பெயரை இடும்படி கூறினார். ஆதித்தர் சோதிடருக்குப் புத்தாடையும், காணிக்கையும் தந்து விருந்து கொடுத்துச் சிறப்பித்தார். ஊர் போற்றும் வகையில் மக்களுக்கு ஆதித்தர் விருந்துக்கு ஏற்பாடு செய்தார். குழந்தையைத் தாலாட்டுப் பாடி பெண்கள் சிறப்பித்தனர்.

ஈராண்டில் ஏகம்பன் பவளவாய் திறந்து இனிக்க இனிக்க மழலை மொழி கூறி மக்களை மகிழ்வித்தான். ஆன்றோரைக் கண்டால் கை கூப்பி ஆசி பெற்றான். கோயில் விழாவின் போது பொம்மைகளைக் கொலு வைத்திருந்த போது சரஸ்வதியை எடுத்து அணைத்தான் ஏகம்பன்.

ஏகம்பனுக்கு ஐந்து வயதாகியது. ஆதித்தர் முறையாக ஏகம்பனை குருகுலத்தில் சேர்த்துப் படிக்க வைத்தார். அப்போது தேரழுந்தூரில் குருகுலத்தில் ஆசான்களாக இருவர் பொறுப்பேற்று போதித்து வந்தனர்.

திருவாலி அமுதனார் என்பவரும், கவி வாண பண்டிதர் என்பவரும் மாறி மாறி வந்து குருகுலச்

சிறுவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுத்தனர். மணலில் விரலால் எழுதிடச் செய்தும், புளியங்கொட்டைகளை அடுக்கி அடுத்தடுத்து எடுத்து வார்த்தைகளாக உருவாக்கச் செய்தும், பின்பு எழுத்தாணி கொண்டு பனை ஓலையில் கீறி எழுதச் செய்தும் முறையாகக் குழந்தைகளுக்குக் கல்வி கற்றுவிக்கப் பெற்றது. குருக்களுக்கு உதவியாக மாணவர்களும் சீடர்களும் பணியேற்று குருகுலத்தில் குழந்தைகளுக்குக் கல்வி கற்றுவிக்கப்பெற்றது.

ஏகம்பனே கம்பனாவான். ஏகம்பன் நாளடைவில் கல்வி கேள்விகளில் சிறந்து முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற்றான். எல்லோரின் அன்புக்குப் பாத்திரமாகி ஏகம்பன் என்று அழைப்பதில் 'ஏ' வைக் குறைத்து 'கம்பன்' என்றே மாணவர்கள் அவனை அழைத்தனர். கம்பன் என்ற பெயரோடு வளர்ந்து வந்தான். குருகுலப் படிப்பு நிறைவில் கம்பன் என்றே பெயர் சூட்டப் பெற்றான்.

வேதநூல் கல்வி, வைணவம், சாக்தம் கற்ற கம்பர் தாமே பல நூல்களையும் கற்றுப் பொருளறியும் திறம் பெற்றான். பின் தந்தையோடு வீட்டில் தங்கிய கம்பர் தந்தையைப் போல, அதிகாலையில் எழுந்து அப்பாவுக்கு உதவியாக பூஜை வழிபாடுகளிலும் நிவேதனம் தயாரித்து அப்பாவுடன் சேத்திரபாலபுரம் சென்று ஸ்ரீ செல்லியம்மாள் வழிபாடு, பின் தம்வீதியில் உள்ள விநாயகர் பூஜை, பின் தேரழுந்தூர் காளியம்மன் பூஜைகளையும் உடனிருந்து உதவி புரிந்தான்.

### ஆதித்தர் பரமபதம் அடைதல்

கம்பனுக்கு ஏழு வயது முடியும் தறுவாயில், பூஜை வழிபாடுகளை மகனுடன் முடித்து வந்த ஆதித்தர், வீட்டில் வந்து ஓய்வெடுக்கப் படுத்தார். பூரணமாய் மகிழ்ந்த நிலையில் அப்படியே ஆதித்தர் பரமபதம் அடைந்தார். ஊரே துக்கத்தில் ஆழ்ந்தது. மக்கள் கம்பரைக் கொண்டு தந்தையின் இறுதிச் சடங்குகளைச் செய்தனர். திலகவதியார் கேவிக்கேவி அழுதார். கம்பர் கருணை காட்டும் காளியை எண்ணி மனதை திடப் படுத்தினார். பதினாறாம் நாளில் ஆதித்தருக்குரிய அந்திமச் சடங்குகள் செய்யப்பெற்றன.

கம்பர் அதிகாலை எழுந்ததும் தாயை வணங்கிப் பின் கலைவாணியை தோத்திரம் செய்தார். அப்பா செய்கின்ற பூஜை வழிபாடுகளைத் தானே செய்தார். நாட்டாமை நல்லமுத்துவும், கம்பருடன் மூன்று பூஜை வழிபாடுகளையும் உடனிருந்து செய்ய உதவி செய்தார்.

கம்பர் காலையில் விளக்கேற்றி முன்பு அமர்ந்து சங்கல்பம் செய்து, முஷ்டியைப் பிடித்து கணபதியைத் தோத்திரம் செய்து, ஆசமனம், கணபதி பூஜை முடித்து யாவும் செய்ய வேண்டிய முறைப்படி செய்து, ஆமருவியப்பன் ஆலயத்தின் பிரதம குருபோலக் கம்பர் திகழ்ந்தார். மேலும் குருகுலத்திற்கும் அடிக்கடி சென்று தத்துவங்களை எல்லாம் கற்றுத் தேர்ந்தார் கம்பர்.

தன் தாயின் அறிவுரைப்படி காலை வழிபாடுகளை முடித்து, திருவாலி அமுதனார், கவிவாண பண்டிதரின் குருகுலத்திற்குச் சென்று மேலும் படித்தார் கம்பர். கம்பர்

பதினான்கு வயதை அடைந்தார். குருகுலத்தில் கம்பன் அதிமேதாவியாகத் திகழ்ந்தான். வாய்மொழித் தேர்வில் ஒவ்வொரு மாணவர்களும் பரிசோதிக்கப்பட்டனர்.

ஒருநாள் கம்பருக்கு வாய்மொழித் தேர்வு நடைபெற்றது. ஆசான்கள் இருவரும் மாறி மாறி சுமார் 30 கேள்விகள் கேட்டனர். கம்பன் சளைக்காமல் விடையளித்தான்.

சில கேள்விகளும் விடையும்

திருவாலி அமுதனார் : உலகில் ஒன்றாய் விளங்குவது எது?

கம்பன் : இறையுணர்வு

கவிவாண பண்டிதர் : இருதிணைகள் யாவை?

கம்பன் : உயர்திணை, அஃறிணை

திருவாலி அமுதனார் : முச்சுடர் எவை?

கம்பன் : சூரியன், சந்திரன், தீ

கவிவாண பண்டிதர் : ஆறு சக்கரவர்த்திகள் யார்?

கம்பன் : அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுச்சன், புரூரவன், கார்த்தவீரியன்.

திருவாலி அமுதனார் : சக்தி என்பது எவை எவை?

கம்பன் : பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி.

கவிவாண பண்டிதர் : நுண்ணறிவாவது எவை?

கம்பன் : ஏடும் சுவடியும்

திருவாலி அமுதனார் : பா எத்தனை?

கம்பன் : பா நான்கு வகை. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா.

கவிவாண பண்டிதர் : மூன்று நூல்கள் யாவை?

கம்பன் : முதல்நூல், வழிநூல், சார்பு நூல்

இவ்வாறு குருகுலத்தில் ஒவ்வொரு மாணவனும் பரிசோதிக்கப் பெற்றனர். எனினும் மற்ற மாணவர்களும் இரண்டு மூன்று கேள்விகளுக்கு பதில் கூற முடியவில்லை. "மாணவமணிகளே கல்வியில் கம்பனைப் போல் நீங்கள் பயில வாழ்த்துகிறேன். வணக்கம்" என்று திருவாலி அமுதனார் கூறினார்.

மூவேந்தர் ஆட்சியும் சடையப்ப வள்ளலும்

சோழநாட்டில் காவேரியின் வடகரையில் பாலசேத்திரபுரம், அதனை அடுத்து குத்தாலம், அதன் அருகில் கதிராமங்கலம் என்று வழங்கும் திருவெண்ணெய் நல்லூரில் கார்காத்த மரபில் தோன்றிய சங்கரன் முதலியார் மகன் தான் சடையப்ப வள்ளல் ஆவார்.

தந்தை சங்கரன் முதலியார் ஆயிரத்திற்கு மேலான கிராமங்களுக்கு அதிபதி. சற்குணத்திலும் பெருந்தனத்திலும் நிகரற்றவர். தென் திக்கில் உயர்ந்த, 'தென் புலம் மான்' என்று போற்றப் பெற்றவர். சிறந்த தெய்வ பக்தர். இவருடைய சகோதரர்கள் கண்ணப்ப முதலியார், இணையார மார்பன் என்ற இருவர் ஆவர்.

கி.பி. 826இல் கராதித்தன் என்னும் சோழன் உறை யூரை அடுத்த கோனாட்டை தலைநகராகக் கொண்டு குறுநில மன்னனாக முடிசூட்டிக் கொண்டான். கராதித்தன் மகனான விஜயாலய சோழன் சக ஆண்டு 772இல் ஆட்சியை ஏற்றான். விஜயாலய சோழன் நார்த்த மலையில் 'விஜயாலய சோழீசுரம்' என்ற கற்றளியை எடுப்பித்தான்.

விஜயர்லய சோழனின் மகனே முதலாம் ஆதித்த சோழன் ஆவான். ஆதித்த சோழன் இளவரசனாக இருக்கும் போதே தன் பராக்கிரமத்தை வெளிப்படுத்த, காவேரியின் இருமருங்கிலும் சிவாலயங்களைத் திருப்பணி செய்தான். அறநெறிச் சாலைகளையும் கல்விச்சாலைகளையும் ஏற்படுத்தினான்.

இக்கால கட்டத்தில் கி.பி. 850ல் பல்லவ ஆட்சியும் சிறந்து விளங்கியது. காஞ்சியில் நந்திவர்ம பல்லவன் தன் மூத்த மகனான நிருபதுங்க பல்லவனுக்கு முடி சூட்டினான். நிருபதுங்கன் காஞ்சி பல்லவர் மேட்டில் அமைந்திருந்த அரண்மனையில் வாழ்ந்து வந்தான். நிருபதுங்கனின் தம்பி கம்பவர்மன், தென்னாற்காடு பகுதியில் இளவரசனாக ஆட்சி நடத்தினான். அதே சமயம் நந்திவர்மனின் மாற்றாந்தாயின் மகனான அபராஜிதன் தொண்டை மண்டல வடமேற்குப் பகுதியில் இளவரசனாக முடிசூட்டி அரசாண்டு வந்தான்.

நிருபதுங்கன் மகள் வீரமாதேவி. வீரமாதேவியை இளவரசியாக்கி பிரியத்தோடு நிருபதுங்கன் வளர்த்து வந்தான்.

இதே நேரத்தில் கி.பி. 815இல் பாண்டிய நாட்டில் சீமாற வல்லபன் என்னும் அரசன் ஆட்சி செய்தான். சீமாற வல்லபனுக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தனர். வரகுணவர்மன், பராந்தக வீரநாராயணன் ஆவார்கள். சோழநாட்டின் ஒரு பகுதியும், தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியும் இவர்களுக்கு உரிமையாக இருந்தன. இதனால் பாண்டியனிடத்தில் சோழரும், பல்லவரும் பகை காட்டிக் கொண்டே இருந்தார்கள்.

சோழனாகிய விஜயாலயன் பல்லவனாகிய நிருபதுங்கனோடு தோழமை பாராட்டி, பாண்டிய நாட்டுப்பகுதியைத் தன் ஆட்சிக்கு உட்படுத்த எண்ணிக் கொண்டிருந்தான். இந்த நிலையில் சடையப்ப வள்ளல், விஜயாலய சோழனோடும், இளவரசன் ஆதித்த சோழனோடும் தொடர்பு கொண்டு தன் கொடை நலத்தை ஊர்மக்களுக்கு உயர்த்திக் காட்டிக் கொண்டிருந்தார்.

### பூப்புனித நீராட்டு விழாவும் கணவனைக் காண்டலும்

பல்லவ அரசன் நிருபதுங்கன் மகள் வீரமாதேவி பதினாறு வயதில் பூப்பெய்தினாள். பூப்புனித நீராட்டு விழாவை நிருபதுங்கன் சிறப்பாக நடத்தத் திட்டமிட்டான்.

முதற்கண் தன் மகள் மஞ்சள் நீராட்டுக்காக 7 பொதி மஞ்சள் அனுப்பும்படி சடையப்ப வள்ளலுக்கு நிருபதுங்கன் ஓலை விடுத்தான்.

தன் ஆட்சியை விரிவுபடுத்த எண்ணிய நிருபதுங்கன், சோழ அரசன் விஜயாலயனுக்கும் மாமன்னரான

ராஷ்டிரக்கூட மன்னருக்கும் ஓலைவிடுத்து விழாவில் கலந்து சிறப்புவிக்க வேண்டினான். அவன் ஓலை விடுத்தபடியே சடையப்ப வள்ளல் 7 யானைகள் மீது 7 மஞ்சள் பொதிகளை ஏற்றி, பல்லவநாட்டு அரண்மனைக்கு அனுப்பினார். விஜயாலய சோழன் தன் பட்டத்தரசியுடனும் தன் மகன் ஆதித்தனுடனும் பூப்புனித நீராட்டு விழாவில் கலந்து சிறப்புவித்தான். விஜயாலய் சோழனின் மாமனார் ராஷ்டிர கூட மன்னரும் அந்நாட்டைச் சார்ந்த முக்கியஸ்தர்களும் விழாவிற்கு வருகை தந்தனர். சடையப்ப வள்ளலும் விழாவிற்கு வருகை தந்து சிறப்புவித்தார்.

சடையப்ப வள்ளல் அனுப்பிய 7 பொதி மஞ்சளும், தூளாக்கப் பெற்று ஓடைநீரில் ஓடி அரண்மனை நந்தவனத்திலுள்ள நீர்தடாகத்தை நிரப்பியது. மஞ்சள் நீர் வந்த ஓடைக்கு மஞ்சள்நீர் கால்வாய் என்று இன்றும் அழைக்கப்படுகிறது. மஞ்சள் நீர்த்தடாகத்தில் வீரமாதேவி நீராடிப் புனிதம் பெற்றாள்.

அலங்கரிக்கப்பெற்ற அரண்மனை மேடையில் அலங்கரிக்கப்பெற்ற வீரமாதேவி அன்னநடையுடன் அங்கு வந்து அமர்ந்தாள். நலுங்கு சடங்கு சிறப்பாக நடைபெற்றது. அந்த நேரத்தில் ஜெகஜோதியாகக் காட்சியளித்த வீரமாதேவி, மேடையின் முன்னமர்ந் திருந்த ஆதித்த சோழனைப் பார்த்தாள். அவனுடைய மையல் விழிப்பார்வையைக் கண்டதும் அப்படியே சொக்கி நோக்கினாள். ஒரு கணம் மின்னல் தாக்கியது போல ஆதித்தன் நிலை குலைந்தான். வீரமாதேவியும்

மையலால் மயங்கினாள். தன் இல்லத்தரசி வீரமாதேவியே என்று ஆதித்தன் முடிவெடுத்தான்.

அப்போது பல்லவ மன்னன் அனைவரையும் விருந்துண்டு செல்லுமாறு வேண்டுகோள் விடுத்தான். விருந்துடன் விழா இனிது முடிந்தது.

### சடையப்ப வள்ளலும் திருவாலி அமுதனாரும்

தேரழுந்தூர் ஆமருவியப்பன் ஆலயத்திற்கு சடையப்பர் ஒருமுறை வருகை தந்தார். அப்போது நாட்டாமை நல்லமுத்துவும், திருவாலி அமுதனாரும், கம்பரும் இருந்தனர். கம்பன் கையில் உள்ள ஓலைச்சுவடியில் எழுத்தாணியால் உழவைப் பற்றி செய்யுள் இயற்றிக் கொண்டிருந்தான். எதிரே வந்த சடையப்ப வள்ளலைக் கண்டதும் கைகூப்பி வணங்கினர்.

சடையப்ப வள்ளல் : தம்பி நீ யார்?

கம்பன் : ஆதித்த குருக்களின் மைந்தன்

சடையப்பர் : ஏகலைவனுக்கு குரு யார்?

கம்பன் : துரோணர்

சடையப்பர் : சிறுவயதிலிலேயே சிரஞ்சீவி யாகி வானத்தில் மின்னு கிறான் அவன் யார்?

கம்பன் : துருவன், அவனே துருவ நட்சத்திரமாகி ஒளிர்கிறான்.

சடையப்பர் : பார் மகள் யார்?

கம்பன் : பூமிதேவி

சடையப்பர் : பார்கவி யார்?

கம்பன் : இருவரைக் குறிக்கும். பார்வதி, கலைமகள்

சடையப்பர் : நீ விரும்புவது?

கம்பன் : வடமொழியில் தேர்ச்சி பெற விருப்பம்

சடையப்பர் : நன்று, ஏற்பாடுசெய்கிறேன்.

உடனே சடையப்பர் திருவாலி அமுதனாரையும், நாட்டாமை நல்லமுத்துவையும் பார்த்து “கம்பனின் வடமொழித் தேர்ச்சிக்கு உகந்தவர் யார்? கூறுங்கள்” என்றார்.

சென்னையில் திருவொற்றியூரில் சமயக்குரவர்களால் தோற்றுவிக்கப் பெற்ற திருமயான மடம் உள்ளது. அங்கு தற்போது சதுரானன பண்டிதர் குருவாக உள்ளார். அவர் சிவபக்தர். வடமொழிப் புலமையும் மிக்கவர். அவரே அங்கு எழுந்தருளியுள்ள வட்டப்பாறை வடிவுடையம்மன் என்ற காளிகோயில் அர்ச்சகர் ஆவார் என்று திருவாலி அமுதனார் கூறினார்.

“அப்படியானால் கம்பனை அங்கே சேர்ந்து பயில ஏற்பாடு செய்யுங்கள். நான் உதவி செய்கிறேன். நான் முதலில் கம்பனை விஜயாலய சோழனிடம் அழைத்து சென்று அறிமுகப்படுத்தவிருக்கிறேன். நான் நாளை அங்கு செல்லவிருப்பதால் உடன் கம்பனை அழைத்துச் செல்லுகிறேன். கம்பனுடைய தாயாரிடமும் இதைத்

தெரிவித்து விடுங்கள்" என்று கூறியவாறு கம்பனை அழைத்துக்கொண்டு உடன் சென்றார் சடையப்பர்.

அப்போது விஜயாலய சோழன் கொடும்பாளூரில் இருந்து ஆட்சியை நடத்திக் கொண்டிருந்தான். சடையப்பர் 13 வயதுடைய கம்பனை அழைத்துக் கொண்டு விஜயாலய சோழனிடம் வந்தார். அங்கு விஜயாலய சோழனோடு அவனுடைய மகன் ஆதித்த சோழனும் வீற்றிருந்தான்.

சடையப்பர் கம்பனை இருவருக்கும் அறிமுகம் செய்தார். "கம்பன் வடமொழித் தேர்ச்சி பெற சென்னையில் திருவொற்றியூரில் அர்ச்சகராகப் பணிபுரியும் சதுரானன பண்டிதரின் மடத்தில் கல்வி கற்க ஏற்பாடு செய்யவிருக்கிறேன்: இக்கம்பனே பின்னால் உங்கள் சபையில் இடம் பெறவிருக்கிறான். நான் இப்பொழுது இக்கம்பனையும் அவன் தாயார் திலகவதியையும் காஞ்சியில் சென்று வாசம் செய்ய அழைத்துச் செல்லவிருக்கிறேன். போய்வருகிறோம்" என்று கூறி சடையப்ப வள்ளல் கம்பனை அழைத்துக் கொண்டு சென்றார்.

### கம்பன் வடமொழிப் பயிற்சிக்காக குடும்பம் இடமாற்றம்

சடையப்பர் ஆதரவோடு கம்பனையும், கம்பனது தாயார் திலகவதியாரையும் தேரழுந்தூரிலிருந்து கம்பனது தாய்வழிப் பாட்டனார் ஊரான தொண்டைமண்டலம் ஊற்றுக்காட்டுக் கோட்டத்தைச் சேர்ந்த பாலையூரில் திலகவதியாரைத் தங்க ஏற்பாடு செய்தார். கம்பனை வடமொழிக் கல்வி பயில காஞ்சிக்கு அழைத்துச் சென்றார்.

கம்பன் காஞ்சியில் தங்கி, தினமும் சென்னையில் திருவொற்றியூர் திருமயான மடத்தில் சதுரானன பண்டிதரிடம் சென்று கல்வி பயிலத் தானே ஏற்பாடு செய்தார்.

கம்பனை அழைத்துக் கொண்டு சிவகாஞ்சி, விஷ்ணுகாஞ்சி, சைனகாஞ்சி, காஞ்சி காமாட்சியம்மன் கோவில், ஏகாம்பரநாதன் கோவில், வரதராஜப் பெருமாள் கோவில், குமரக்கோட்டம் போன்ற இடங் களுக்கு அழைத்துச் சென்று தலத்தின் பெருமையை சடையப்பரே கம்பனுக்கு விளக்கிக் காட்டினார்.

**கம்பனின் வடமொழித் தேர்ச்சியும், தமிழில் இராமாயணத் தொடக்கமும்**

கம்பனுக்கு வடமொழிப் பயிற்சி நல்குவதில் சிறந்தவர் திருவொற்றியூர் ஆதிபுரேசுவர் ஆலயத்தில் பணிபுரியும் சதுரானன பண்டிதர் என்பதை அறிந்த நிலையில் திருவாலி அமுதனார் கம்பனை அழைத்துக் கொண்டு அங்கு சென்றார்.

ஆதுபுரேசுவர் ஆலயத்திலுள்ள ஒற்றியூர் காளி சந்நிதியில் பூஜையை முடித்து வெளியே வந்தார் சதுரானன பண்டிதர்.

திருவாலி அமுதனாரும், கம்பனும் வணக்கம் தெரிவித்தனர். திருவாலி அமுதனார் “இவன்தான் கம்பன். நான் ஏற்கனவே கூறியபடி, தங்களிடம் பயிற்சி பெற வந்திருக்கிறான் இவன்!” என்று கூறினார்.

கம்பன் சதுரானன பண்டிதரின் திருவடிகளில் பணிந்து வணங்கினான். “நீங்கள் இருவரும் சக்கரபாடி

வீதியில் உள்ள நமது மடத்தின் கல்விச் சாலைக்குச் செல்லுங்கள்” என்று சதுரானன பண்டிதர் கூறினார். இருவரும் புறப்பட்டனர்.

சக்கரபாடி வீதியில் உள்ள பாடசாலைக்கு இருவரும் வந்தபோது, அங்கு மாணவர்கள் ஒழுங்காக அமர்ந்து ஓலைச் சுவடிகளைப் படித்துக் கொண்டிருந்தனர்.

அதே சமயம் சதுரானன பண்டிதரும் வந்தார். மாணவர்கள் எழுந்து வணங்கினார்கள். இன்று ஒரு புதிய மாணவன் வந்திருக்கிறான் என்று மாணவர்களை நோக்கி சதுரானன பண்டிதர் கூறினார்.

கம்பன் அருகே வந்து குரு தட்சிணை சமர்ப்பித்து குருநாதரைத் தெண்டனிட்டான். குருநாதராகிய சதுரானன பண்டிதர் கம்பனிடம் ஓர் ஓலைச்சுவடியைக் கொடுத்து சப்தமிட்டுப் படிக்கும்படி கூறினார். மற்ற மாணவர்கள் அதைப் பின்பற்றி ஒலிக்கும்படி கூறினார்.

திருவாலி அமுதனார் விடை பெற்றுச் சென்றார். சக்கரபாடி வீதியிலுள்ள சைவகலாசாலையில் தங்கிக் கம்பன் கல்வி பயின்றான். பின்புறமுள்ள நந்தவனத்தில் அதிகாலை உடற்பயிற்சி, யோகம், தியானமும் நடை பெற்றது. காலை உணவுக்குப் பின் படிப்பு தொடர்ந்தது. கம்பன் முதலில் அமரகோசம் படித்தான். வடமொழி நூல்களில்தேர்ந்தஆதிசங்கரர்இயற்றியசௌந்தர்யலஹரி என்ற நூலைத் தமிழில் கற்றுத் தேர்ந்தான். வான்மீகி அருளிய இராமாயணத்தைக் கற்றுத் தேர்ந்து தமிழில் அதன் கருத்துக்களைத் தெளிவாகக் கற்றான்.

நான்காண்டு வடமொழி அறிவு பெற்று, வடமொழி நூல்களை எல்லாம் தமிழில் மொழி பெயர்க்கும் திறம் பெற்றான். அடுத்த ஆண்டு கலாசாலைப் பயிற்சியும் தேர்வும் முற்றுப் பெறும் என சதுரானன பண்டிதர் வெளியிட்டார்.

காலம் கடந்தது. தேர்வு நேரம் வந்தது. சதுரானன பண்டிதர் ஒவ்வொரு மாணவனையும் தனித்தனியே பரிசோதித்தார். வடமொழி நூல்களில் ஏதேனும் ஒரு நூலில் உள்ள சுலோகத்தை குரு கூறும் போது, உடனே அதற்கு தமிழில் கருத்தை அழகாகக் கம்பன் கூறினான். வடமொழி நூல்களின் கருத்துக்களைத் தமிழில் கூறி அதன் சுலோகத்தை வடமொழியில் கூறப் பணித்தார் ஆசிரியர். அனைத்துக்கும் உடனுக்குடன் கம்பன் விடை தந்தான். மற்ற மாணவர்களே வியந்தார்கள். கம்பனைப் பரிசோதிக்கும் போது திருவாலி அமுதனாரும் உடன் இருந்தார். ஸ்ரீமத் வால்மீகி இராமாயணத்தில் இராமாவதாரம் பற்றிய பாடல், சீதா கல்யாணம் பற்றிய சுலோகம், இராமாயண இறுதி சுலோகம் இவ்வாறு குரு கேட்ட கேள்விகளுக்கெல்லாம் உடனுக்குடன் பதில் விடுத்தான் கம்பன்.

பொது அறிவும் பரிசோதிக்கப் பெற்றது

கேள்வி : இமயமலையிலுள்ள புண்ணியத் தலங்கள் எவை?

பதில் : திருக் கைலாயம், திருக்கேதாரம், பதிரி காசிரமம், கங்கோத்ரி, யமுனோத்திரி, ரிசிகேசம், கோகர்ணம்

கேள்வி : வாசம் என்பது என்ன?

பதில் : இலவங்கம், ஏலம், கற்பூரம், சாதிக்காய், தக்கோலம்.

சதுரானன பண்டிதர் அனைத்து மாணவர்களையும் நோக்கி, "மாணவ மணிகளே! தமிழ் இலக்கணம், இலக்கியம், இதிகாசபுராணங்கள், பகவத்கீதை, இவைகளில் உங்களுக்கு சோதனை செய்யப்பெற்றது. குறிப்பாக 17 திணை இலக்கியம், 36 புராண இலக்கியம், 30 பக்தி இலக்கியம், 51 சிற்றிலக்கியம், 16 தத்துவ இலக்கியம் அனைத்திலும் உங்கள் கல்வி சோதிக்கப்பெற்றது, உங்களில் கம்பனுக்கே முதலிடம் உண்டு. அனைவரும் உரிய இடங்களில் பேர்பெற்று சிறக்க வாழ்த்துகிறேன். இத்துடன் உங்கள் பயிற்சி நிறைவேறியது" என்று கூறி விடைகொடுத்தார் சதுரானன பண்டிதர்.

கல்வியை வெற்றிகரமாக முடித்துத் திரும்பிய, திருவாலி அமுதனாரோடு வந்த, கம்பனைத் தாய் திலகவதியார் திருஷ்டி கழித்து அன்போடு முத்தமிட்டார்.

கம்பன் தாய் திலகவதியார், கம்பன் கல்விக்கு உறுதுணையாயிருந்த திருவாலி அமுதனாரிடமும், சடையப்ப வள்ளலிடமும், "நானும் என்மகன் கம்பனும் என்றும் தங்கட்கு கடமைப்பட்டுள்ளோம்" என்று வாழ்த்தினார். கம்பனும் மகிழ்ச்சியடைந்து இராமாயண காவியத்தைத் தமிழில் படைக்க வேண்டிய ஆயத்தங்களைச் செய்தார்.

### கம்பர் – நிகர்த்தவல்லி திருமண நிகழ்ச்சி

வடமொழித் தேர்ச்சி பெற்ற கம்பன் வான்மீகி இயற்றிய இராமாயணத்தைத் தமிழில் இயற்ற ஆவன

செய்து கொண்டிருந்தான். இந்நிலையில் திருவாலி அமுதனார், சதுரானன பண்டிதரைச் சந்தித்தார். அப்போது சதுரானன பண்டிதர், திருவாலி அமுதனாரை நோக்கி, "என்னுடைய உள்ளக் கிடக்கையை உங்களிடம் கூற எண்ணுகிறேன்! என்னுடைய மகளும் இம்மடத்திலே எமது தமக்கையால் வளர்க்கப் பெற்று வருபவளுமாகிய நிகர்த்தவல்லி நன்கு கற்றவள். அவளே கம்பனுக்கு பொருத்தமானவள் என்று கருதுகிறேன். தாங்கள் அனைவரிடமும் கலந்தாலோசித்து மங்களம் கூறவும்" என வேண்டினார்.

திருவாலி அமுதனாரும் சடையப்ப வள்ளலிடம் இக்கருத்தைக் கூற சடையப்ப வள்ளலும் மகிழ்ந்தார். கம்பனின் தாய் திலகவதியார் தங்கியிருந்த பாலூர் வந்து, கம்பன் அங்கு இருக்கும் போதே, சதுரானன பண்டிதரின் மகளைப் பற்றிப் பேசினார். இதைக் கேட்ட கம்பன் "எனக்குத் திருமணமா!" என்று வியந்து கூறினான். தாய் கம்பனை நோக்கி, "மகனே! உனது நலம் குறித்துப் பெரியோர்கள் ஆவன செய்யும் போது நீ ஏற்றுக் கொள்ள வேண்டும். நான் சம்மதப்படும் போது, நீயும் ஏற்றுக்கொள்ள வேண்டும். உன் எதிர்காலம் நலமாக இருக்கும்!" என்று கூறினாள்.

அப்போது திருவாலி அமுதனார் கம்பனிடம், "நான் சடையப்பரிடமும் மற்றும் அரசரிடமும் கலந்து பேசுகிறேன். நீ பெண்ணைப் பார்க்க சீக்கிரம் ஏற்பாடு செய்கிறேன்! உனக்கு கலையிலும் கல்வியிலும் சிறந்த மனைவி அமையப் போகிறாள்! நான் சென்று வருகிறேன்!" என்று கூறிச் சென்றார்.

திருவொற்றியூர் ஆதிபுரீச்சுரர் ஆலயத்தில், காலை நேரத்தில் அனைவரும் பெண் பார்க்க ஏற்பாடு செய்தார் திருவாலி அமுதனார். சதுரானன பண்டிதரின் மகள் நிகர்த்தவல்லி, செங்கோட்டி யாழை மீட்டி, கீர்த்தனைகள் பாடினாள். கம்பன் இசையில் தன்வயப்பட்டதோடு, எதிர்கால மனைவியின் அழகைக் கண்டும் சொக்கினான். பெண் வீட்டாரும், கம்பன் வீட்டாரும் சூழ்ந்து அமர்ந்து பிரசாதங்களை பக்தியுடன் பரிமாறிக் கொண்டனர். விரல்களால் வீணை மீட்டியவாறே நிகர்த்தவல்லியும் முன் வரிசையில் அமர்ந்திருந்த மாப்பிள்ளை கம்பனைத் தன் கயல் விழிப்பார்வையால் கண்டாள். அண்ணலும் நோக்க, மின்னல் பார்வையால் நிகர்த்த வல்லியும் பார்க்க, கூடியிருந்தோறும் அதனைக் கண்டு இரசித்தனர்.

பெண்வீட்டார் நிகர்த்த வல்லியுடன் எழுந்து, "நாங்கள் வருகிறோம்!" என்று கூறிப் புறப்பட்டனர். அனைவரும் வணக்கம் தெரிவித்தனர். கோயிலின் கோபுரவாசல் வரை அனைவரும் சென்றனர். அப்போது, பெண்ணழகி, கண்ணழகி, பேரழகி, நிகர்த்தவல்லியின் இசையிலும், சொல்லிலும், நடையிலும், ஈடுபாடு கொண்ட கம்பன் வாய்விட்டுத் தன்னையறியாமலே பாட ஆரம்பித்தான்.

"இல்லென்பார் தாமவரையாமவர் பேர் அறியோம்
பல்லென்று செவ்வாம்பல் முல்லையும் பாரித்து
கொல்லென்று காமனையும் கண்காட்டிக் கோபுரத்தின் கீழ்
நில்லென்று போனார் என்நெஞ்சே விட்டுப்போகாளே!"

கம்பன் பாடிய பாடலை எல்லோரும் கேட்டனர். அப்போது திருவாலி அமுதனாரும் அப்பாடலின் பொருளைக் கேட்டார்.

அதன்பொருள்: இல்லறமெனும் என் குடும்பவிளக்காக ஒளிரும் இந்த நங்கையை எங்கோ பார்த்த நினைவு! அவள் பெயர் யானறியேன்! யார் மகள் என்று இப்பொழுதறிந்தேன்! இவள் பற்கள் செவ்வாம்பல், முல்லைச் சிரிப்பு முகத்தாள். பேரழகால் என்னை ஆட் கொண்டாள். காமனையும் வெல்பவள். "கோபுரத்தின் கீழ் நிற்பாய்!" என்று கூறி இதயத்தில் புகுந்து விட்டாள். என் நெஞ்சை விட்டுப் போகாள்!

மேற்கண்ட பாடலின் பொருளை அறிந்த திருவாலி அமுதனார், "கம்பனுக்கு மனைவியாக வரவிருக்கும் பெண்ணின் பெயர் நிகர்த்தவல்லியாகும். சதுரானன பண்டிதரின் மகள். சதுரானன பண்டிதருக்கு மகள் பிறந்த நிலையில், சதுரானன பண்டிதரின் மனைவி காலமானதால், சதுரானன பண்டிதரின் தமக்கை கமலநாச்சியார் வளர்த்து வந்தாள்" என்று கூறினார்.

திருவாலி அமுதனார் ஒரு நாள் கம்பனை அழைத்துக்கொண்டு சென்று திருவெண்ணெய் நல்லூரில் வாழும் சடையப்பவள்ளலிடம் சென்று, பெண் பார்த்து முடிவு செய்ததை எடுத்துக் கூறினார். சடையப்பவள்ளலும் உடனிருந்து தான் திருமணத்தை நடத்தித் தருவதாகக் கூறினார்.

மணமகளுக்குப் பரிசம், ஆபரணம் கொடுப்பது பற்றியும், திருமணநாள் குறிப்பது பற்றியும், திருமணத்தை சென்னை மயிலாப்பூரில் தமிழ்ப்

புத்தாண்டு தைத்திருநாளில் நடத்துவது பற்றியும் முடிவு செய்யப்பெற்றது. நாட்டாமை நல்லமுத்துவை உடனிருந்து தொண்டுபுரிய சடையப்பவள்ளல் வேண்டினார்.

கம்பன் — நிகர்த்தவல்லி திருமணத்திற்கு ஐந்து நாட்கள் முன்னரே திருமணப்பந்தல் போடப்பெற்றது. மூன்று நாட்கள் திருமணவிழா நடைபெற ஏற்பாடு செய்யப் பெற்றது. முதல்நாள் பெண் அழைப்பு நிகழ்ச்சியுடன் விழா தொடங்கியது. இரண்டாம் நாள் திருமண நாள், மூன்றாம் நாள் மணமக்கள் வீதிஉலா, வாணவேடிக்கையுடன் திருக்கோவில் தரிசனம் அனைத்தும் சிறப்பாக நடைபெற்றது. திருவொற்றியூரில் மாமனார் இல்லத்தில் மருமகனுக்கு ஐந்து நாட்கள் விருந்து வைபவம் நடைபெற்றது.

### தம்பதியர்களை சடையப்ப வள்ளல் சிறப்பித்தல்

திருமணத் தம்பதியர்க்கு சடையப்ப வள்ளல், தன்னுடைய திருவெண்ணெய் நல்லூரில் வரவேற்பு செய்ய ஏற்பாடு செய்தார். சோழமன்னன் விஜயாலயன், மகன் ஆதித்தசோழன் திருவெண்ணெய் நல்லூர் வந்து மணமக்களை வாழ்த்திச் சென்றார்கள்.

திருவெண்ணெய் நல்லூரில் மணமக்கள் தங்கு வதற்கான இல்லத்தை சடையப்பவள்ளல் தன் கொடைத்திறத்தால் சிறக்கச் செய்தார். செங்கரும்புக் கால்நட்டி, செந்நெல்கதிர்களால் கூரை வேய்ந்து, கமுகு, ஈச்சம், பனை, தெங்கு குலைகளைத் தொங்கவிட்டு, வாழை தென்னப்பாளைத் தோரணம் கட்டி அதனுள் தம்பதிகளைத் தங்கச் செய்தார் சடையப்பவள்ளல்.

கம்பனும் நிகர்த்தவல்லியும் அனைத்துச் செயல்களையும் கண்டு பூரிப்படைந்தனர்.

சடையப்பர் செய்த கொடையால் திருவெண்ணெய் நல்லூர் பெயர் மாறி கதிர்வேய்மங்கலம் என்றும் கதிராமங்கலம் என்றும் சிறப்பிக்கப்பெற்றதை யாவரும் அறிவர். மூவேந்த மன்னர்கள் உட்பட அனைவரையும் கூட்டுவித்து, அனைவருக்கும் விருந்தளித்து போற்றினார் சடையப்ப வள்ளல். அதோடு மட்டுமல்ல, கம்பர் தம்பதிகள், தாய் திலகவதி, நாட்டாமை நல்லமுத்து, தம்பதியர் யாவரும் குடும்பத்தோடு தேரழுந்தூர் புறப்பட வேண்டிய செலவு வகைகளை சடையப்ப வள்ளலே ஏற்றுக்கொண்டு சிறப்பித்தார்.

தேரழுந்தூரில் விநாயகர் ஆலயம், கிராம தேவதை காளிகோவில், ஆமருவியப்பன் ஆலய தரிசனமெல்லாம் தம்பதியர்கள் ஏற்றனர். இருபது வயதான கம்பரும் 17 வயதான நிகர்த்தவல்லியும் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சி எங்கும் நடைபெறாச் சிறப்பு வாய்ந்ததாகும். திருமண நிகழ்ச்சியுடன் பூரிப்பால் கம்பர் ‘ஏரெழுபது,’ ‘திருக்கை வழக்கம்’ நூல் நிகழ்ச்சிகள் மனதில் ஊற்றெடுக்க ஆரம்பித்தன.

இப்பாறு கம்பர் — நிகர்த்தவல்லி திருமண நிகழ்ச்சி பெரு வைபவமாக நடைபெற்றுப் போற்றக் காணுகின்றோம். தேரழுந்தூர் வந்த தம்பதியர் மீண்டும் காஞ்சிபுரத்தில்சென்றுவாழஏற்பாடுசெய்யப்பெற்றனர்.

### காஞ்சிபுரத்தில் கம்பர் குடியேற்றம்

தன் மனைவி நிகர்த்தவல்லியுடன் கம்பர் காஞ்சி புரத்தில் குடும்பம் நடத்த ஏற்பாடு செய்தார்.

கம்பருடைய தாய் திலகவதியும் உடன் குடியேற அறிகின்றோம். காஞ்சியை ஆண்ட ஆதித்த சோழன் கம்பரை அவைப்புலவராகவும், ஆலோசகராகவும், அரண்மனையில் இடம் பெறச் செய்தான். சடையப்ப வள்ளலும் அடிக்கடி அரண்மனை வந்து செல்வதை அறிகின்றோம்.

ஆதித்தசோழனே காஞ்சிபுரத்தின் மேற்கே, கீழ் அம்பி என்ற தலத்தில், கம்பர் குடியிருக்க ஒரு மாளிகையும் கட்டித் தந்தார் என்பதை அறிகின்றோம். கீழ் அம்பி என்ற தலத்தில் அம்பிகாபதீசுவரர் என்ற ஆலயத்தின் பக்கத்திலுள்ள மாளிகையில் கம்பர் தன் மனைவியுடனும், தாயுடனும் குடியேறினார். ஆதித்த சோழனே முதலில் அமராவதிப் பட்டினத்திலுள்ள தன் அரண்மனையில் கம்பரைக் குடும்பத்துடன் வரவழைத்து, அங்கிருந்து கம்பரின் குடும்பத்தை அழைத்துக் கொண்டு சென்று கீழ் அம்பியில் உள்ள மாளிகையில் குடியேறச் செய்தான்.

கம்பர் சகல வசதியுடன் மாளிகையில் குடியேறினார். மாளிகையில் உள்ள பூஜை அறையில், முதலில் கலைவாணிக்கு பூஜை நடத்திப் பின் மாளிகையிலிருந்து புறப்பட்டு மனைவி நிகர்த்த வல்லியுடன் அருகிலுள்ள அம்பிகாபதீசுவர் ஆலயத்திற்குச் சென்று தரிசித்து வந்தார். அனுதினமும் அக் கோவிலுக்குச் சென்று வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் கம்பர். மனைவி நிகர்த்தவல்லியும் தங்களுக்குக் குழந்தைப் பேறு கிடைக்க வேண்டுமென்று இறைவனை வழிபட்டு வந்தார்.

ஆதித்தசோழனுக்கும் வீரமாதேவிக்கும் திருமணம்

மூன்றாம் நந்திவர்மனின் மனைவி இராஷ்டிரகூட இளவரசி சங்கமாதேவி ஆவாள். மூன்றாம் நந்தி வர்மனுக்கும் சங்கமாதேவிக்கும் பிறந்த மூத்தமகனே நிருபதுங்கன் ஆவான்.

நிருபதுங்கனின் மகள் வீரமாதேவி ஆவாள். அவளுடைய பூப்புனித நீராட்டு விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தவனே விஜயாலய சோழன் மகன் ஆதித்த சோழன் ஆவான். பதினாறு வயதடைந்த வீரமாதேவியின் நலுங்கு விழாவில் கலந்து கொண்ட ஆதித்தசோழன் தன் மனதைப் பறிகொடுத்த நிலையை நாம் முன்பு கண்டோம். ஆதித்த சோழனையே தன் கணவனாக ஏற்க வேண்டுமென்று எண்ணி விட்டாள்.

வீரமாதேவி தனக்கு நடந்த நலுங்கு விழாவிற்குப் பின் ஒருநாள், தன் தந்தை நிருபதுங்கனிடம் தன் எண்ணத்தைக் கூறினாள். நிருபதுங்கனும் கூடிய சீக்கிரம் திருமணம் நடைபெறும் என்றான்.

இந்நிலையில் நிருபதுங்கன், பாண்டியன் வரகுணனை எதிர்த்து அவன் நாட்டின் பகுதியைத் தன் நாட்டோடு சேர்க்க எண்ணி ஆதித்த சோழனுடைய உதவியை நாடினான். ஆதித்த சோழன் தன் தலைமையில் தன் படையோடு நிருபதுங்கனுக்கு உதவி செய்தான். தெள்ளாற்றில் படைகளைப் பெருமளவு சேதமடையச் செய்து 'தெள்ளாறெறிந்த சோழன்' என்ற விருதையும் அவன் பெற்றான். ஆதித்த சோழனுடைய படைகள் தனக்கு உதவி செய்த காரணத்தினால்

ஆதித்த சோழனுக்குத் தன் மகள் வீரமாதேவியைத் திருமணம் செய்து கொடுக்க முடிவு செய்தான்.

தன் முடிவின்படி ஆதித்த சோழனுக்கும் தன் மகள் வீரமாதேவிக்கும் சிறப்பாகத் தன் முன்னிலையில் திருமணத்தை நடத்தினான். வீரமாதேவியும் ஆதித்த சோழனும் காதலால் ஒன்றுபெற்று, திருமணம் செய்து கொண்டனர். நிருபதுங்கன், பாண்டிய நாட்டின் ஒரு பகுதியையும் தொண்டை நாட்டின் ஒரு பகுதியையும் ஆதித்த சோழனுக்குக் கொடுத்துத் தனது வலதுகரமாக அவனைச் செயல்படவைத்தான்.

அம்பியில் கம்பர் பாடசாலை நடத்துதல்

அம்பிகாபதீசுவரரை வழிபட்டு வந்த காரணத்தினால் கி.பி. 862ல் கம்பருக்கு ஓர் ஆண்மகன் பிறந்தான். அம்பிகாபதீசுவரர் அருளால் மகன் பிறந்த காரணத்தினால் மகனுக்கு அம்பிகாபதி என்ற பெயரைச் சூட்டினார்கள் தம்பதியர். மாளிகையிலேயே தன் மகனுக்குத் தமிழ் நூல்களில் ஆர்வமுறச் செய்து, கம்பர் பயிற்றுவித்தார்.

கம்பரை ஆதரித்து அவைப் புலவராக்கிய ஆதித்த சோழனுக்கு பிரியமான மனைவியர் இருவர். வீரமாதேவி, இளங்கோ பிச்சி ஆவார்கள். இரண்டாவது மனைவி இராஷ்டிரகூடப் பெண்ணாவாள். முதல் மனைவி வீரமாதேவிக்குப் பிறந்த மகன் பராந்தகன் ஆவான். இளங்கோபிச்சிக்குப் பிறந்த மகள் அமராவதி ஆவாள். இளங்கோ பிச்சிக்குப் பிறந்த மற்றொரு மகன் கன்னரத்தேவன் ஆவான். இதே நேரத்தில் கம்பருக்கும் நிகர்த்தவல்லிக்கும் பிறந்த ஒரு மகள் காவேரி ஆவாள்.

ஆதித்த சோழன், சடையப்பவள்ளல் இருவரின் பேருதவியால் கம்பர், அம்பியில் கல்விச் சாலை ஒன்று நடத்தி வந்தார். அப்பாடசாலையில் சோழ மன்னர் பிள்ளைகளும், பிறநாட்டு மன்னர் பிள்ளைகளும் அங்கு வந்து தங்கி, கல்வி பயின்றனர். கம்பர் மகன் அம்பிகாபதி, மகள் காவேரி, ஆதித்த சோழனுடைய மகன்களாகிய பராந்தகன், கன்னரத்தேவன், மகள் அமராவதி மற்றும் பல்லவ, சேர அரசர்களின் மக்கள், மற்றும் செல்வந்தர் பிள்ளைகளும் கம்பர் நடத்திய பாடசாலையில் பயின்றனர்.

கம்பர் ஏற்கனவே தன் குலகுருவாகிய திருவாலி அமுதனாரிடம் குருகுலத்தில் திணை இலக்கியம் 17ம், புராண இலக்கியம் 36ம், பக்தி இலக்கியம் 30ம், சிற்றிலக்கியம் 51ம், தத்துவ இலக்கியம் 16ம் கற்றுத் தேர்ந்திருந்தார். பின் சென்னை திருவொற்றியூர் மடாதிபதி சதுரானன பண்டிதரிடம் வடமொழியைக் கம்பர் கற்றுத் தேர்ந்தார். ஆதிசங்கரர் அருளிய சௌந்தர்யலஹரி மற்றும் வான்மீகி ராமாயணம், வியாச ராமாயணம், வசிட்ட ராமாயணம் ஆகிய வடமொழி இராமாயணங்களைக் கற்றுத் தேர்ந்திருந்தார். பின்னர் தான் கம்பர் திருமணமேற்றார். இப்பொழுது அம்பியில் கம்பர் கல்விச்சாலை நடத்தி, தன்னிடம் பயின்ற சோழ, பல்லவ, சேர அரச குமாரர்கள், குமாரத்தியர்களுக்கு வடமொழி இராமாயணம், பிறநூல்களையெல்லாம் கற்றுக்கொடுத்து அவர்களைப் புலமையில் சிறந்தவர் ஆக்கினார்.

ஏற்கனவே கம்பர் தாம் இயற்றியிருந்த 'ஏரெழுபது' என்ற நூலையும், 'திருக்கைவழக்கம்' என்ற நூலையும்

விஜயாலய சோழன் கூறியபடி இப்பொழுது காஞ் சியில் தீபப்பிரகாசர் என்னும் விளக்கொளிப்பெருமாள் கோவில் தெருவிலுள்ள வண்டை வாடியில் கட்டப் பட்ட சடையப்பவள்ளல் மண்டபத்தில் தக்க ஏற்பாட்டுடன் அரங்கேற்றம் செய்தார்.

### மூன்று நூல்கள் அரங்கேற்றம்

ஏரெழுபது, திருக்கை வழக்கம், அத்துடன் செம்பொற்சிலை எழுபது என்ற நூலையும் சடையப்ப வள்ளல் மண்டபத்தில் அடுத்தடுத்து அரங்கேற்றம் செய்தார். சடையப்ப வள்ளல் மண்டபத்தில் தூண்களில் தசாவதார சிற்பங்களும், இராமர், சீதை, இலட்சுமணர், அனுமர், கம்பர், மனைவி நிகர்த்தவல்லி சிற்பங்களும் இன்றும் சிதைந்து காணப்படுவதைக் காணுகின்றோம்.

மேற்கண்ட நூல்களைக் கம்பர் அரங்கேற்றம் செய்யும்போது நிருபதுங்க பல்லவன், விஜயாலய சோழன், ஆதித்த சோழன், சடையப்ப வள்ளல், புலவர்கள், அறவோர்கள், ஊர் மக்கள் திரளாகக் கூடிக் கேட்டார்கள்.

கம்பர் அரங்கேற்றத்தின் துவக்கத்தில் ஏரெழுபது வின் காப்புச் செய்யுளாக ஏகாம்பரநாதர் கோயில் ஆயிரங்கால் மண்டபத்திலுள்ள ஸ்ரீ விகட சக்கர விநாயகரைப் பாடி அரங்கேற்றினார்.

கந்தபுராணத்தை இயற்றிய கச்சியப்ப சிவாச்சாரி யாரும், கம்பர் பாடிய ஸ்ரீவிகட சக்கர விநாயகரையே தம் நூலுக்கும் காப்புச் செய்யுளாக அமைத்து வேறு விதமாகப் பாடியுள்ளதை யாவரும் அறிவோம்.

இவ்வாறு ஏரெழுபது, திருக்கை வழக்கம், செம்பொற்சிலை எழுபது மூன்று நூல்களையும் அரங்கேற்றியபோது, அவருடைய மாணவ, மாணவிகளாகிய அம்பிகாபதி, காவேரி, பராந்தகன், அமராவதி, கன்னரத்தேவன், மற்றும் அரச குமாரர்களும், குமாரத்திகளும் உடனிருந்து ஏவல் பணிகளைப் புரிந்து சிறப்பித்தனர்.

கம்பர் பாடிய மூன்றாவது நூலான செம்பொற்சிலை எழுபது என்ற நூலில் ஸ்ரீவிகட சக்கர விநாயகரையும், பெரிய காஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ள பச்சை வண்ணர்,பவள வண்ணர் பெருமாளையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இவ்வாறு கம்பர் காஞ்சியின் அம்பியில் கல்விச்சாலை சிறப்பாக நடத்தியும், பக்கத்திலுள்ள சடையப்ப வள்ளல் மண்டபத்தில் ஏரெழுபது, திருக்கை வழக்கம், செம்பொற்சிலை எழுபது என்ற நூல்களையும் வெளியிட்டு, சிறப்பாக தம் மக்களோடும், அரச குடும்பத்தோடும், சடையப்ப வள்ளலோடு 20 ஆண்டுகள் காஞ்சியில் வாழ்ந்தார் என்பதை அறிகிறோம்.

தொடர்ந்து கம்பர் சடையப்பர் ஏவலினால் இராமாயணத்தையும்தமிழில்இயற்றிக்கொண்டிருந்தார்.

### ஸ்ரீ விஜயதசமி விழா

கம்பர் காஞ்சிபுரம் அம்பியிலே நவராத்திரி விழாவையும் தானே முன்னிலை ஏற்றுச் சிறப்பாக நடத்தியதையும் அறிகிறோம். பத்து நாள் விழாவையும் உரிய நிகழ்ச்சிகளுடன் கம்பர் தன் கலாசாலை

மாணவ மாணவிகளைக் கொண்டு நடத்தினார். காவேரி, அமராவதி, ஆடல் பாடல் நிகழ்ச்சிகள் தினசரி நடைபெற்றன.

இவ்விழாவிற்கு ஆதித்த சோழனும், அவனுடைய தேவிகளான வீரமாதேவியும், இளங்கோ பிச்சியும், இளவரசர்களும் வருகை தந்து சிறப்பித்தனர்.

அவ்விழாவின் போது சேரநாட்டு அரசன் தாணுரவி குடும்பத்தோடு அங்கு வந்து தன் மகளை ஆதித்தசோழன் மகனாகிய பராந்தகனுக்குக் கொடுத்து மணவினை நடத்த அங்கு வருகை தந்ததையும் அறிகிறோம். அவர்களையும் கம்பர் வரவேற்று திருமண நிகழ்ச்சியைச் சிறப்பாக நடத்தினார் என்பதையும் அறிகிறோம்.

அப்போது சேரமன்னன் தாணுரவி, கம்பரிடம், "தாங்கள் எங்கள் ஊரிலும் வந்து நவராத்திரி விழாவை நடத்தித் தரவேண்டும்" என்று வேண்டினான். கம்பர் "நான் சமயம் வரும்போது அங்கு வந்து நடத்தித் தருகிறேன்" என்று கூறினார்.

விழாவிற்கு வருகை தந்த அனைவருக்கும் புத்தாடையும், பிரசாதமும் வழங்கிக் கௌரவித்தார் கம்பர்.

ஏற்கனவே சேரமன்னன் தாணுரவி தன் மூத்த மகள் மங்கள தேவியை வரகுணபாண்டியன் மகன் பராந்தக பாண்டியனுக்கு மணமுடித்துக் கொடுத்திருந்தார். அவர்களுக்கு மூன்றாம் நரசிம்மன் என்ற பாலகனும் பிறந்திருந்தான். இப்பொழுது பண்டிகையின் போது

ஆதித்த சோழன் மகன் பராந்தக சோழனுக்கு தாணுரவி. தன் இரண்டாம் மகள் கோகிழானடிகள் என்பவளைக் கொடுத்து மணவினை நிகழ்ச்சியைச் சிறப்பாக நடத்தினார்.

மேற்கண்ட நிகழ்ச்சிகளினால் மற்றொரு மேலான சம்பவத்தையும் நாம் அறிகிறோம். அதாவது, சேர, சோழ, பாண்டியர்கள், பல்லவர்கள் முன்பிருந்த பகையை நீக்கி, சண்டைகள் ஏதுமின்றி ஒன்றுபட்டிருந்தனர் என்பதை அறிகிறோம். கம்பர் அனைத்து மன்னர்களிடமும் அன்பு பாராட்டியிருந்தார் என்பதை அறிகிறோம்.

அம்பிகாபதியின் முதல் திருமணம்

பருவம் அடைந்த அமராவதி தமிழ்ப்புலமை பெற்றுவளரும் அம்பிகாபதியை நேசித்தாள். ஒருநாள் சடையப்பவள்ளல் மண்டபத்தில் அமராவதியும், அம்பிகாபதியும் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பதைத் தற்செயலாகக் கம்பர் கண்டார். இருவரின் நெருக் கத்தைக் கண்ட கம்பர் அவர்கள் உறவை நீக்க எண்ணினார். தம் உவச்சர் குலத்தில் பிறந்த அர்ச்சகர் மகள் ஒருத்தியைத் தன் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க துரிதமாக ஏற்பாடு செய்தார்.

கம்பர் கண்ட அப்பெண் அருண்மொழி என்னும் பெயரை உடையவள். கம்பர் அம்பிகாபதியை நோக்கி "நம் குலத்தில் சிறந்த ஒரு பெண் அருண்மொழி. அவளை உனக்குத் திருமணம் செய்து வைக்க விரும்புகிறேன். அப்பெண்ணின் தந்தை உன்னை மருமகனாக ஏற்றுக் கொள்ள சம்மதித்து விட்டார். சடையப்ப வள்ளலும்,

அம்மாவும் சம்மதம் தெரிவித்துள்ளனர். அடுத்த வாரம் திருமண நாளை நாங்களே கூடிப் பேசி விட்டோம்" என்று கம்பர் மகனிடம் கூறிவிட்டகன்றார்.

திலவகதி நாச்சியார் தன் பேரனைப் பார்த்து, "உனக்கு வாழ்க்கை நல்கும் அப்பெண்ணை நானும் முழு மனதாக நேசிக்கிறேன்" என்று அம்பிகாபதியிடம் கூற, தட்ட முடியாத நிலையில், அம்பிகாபதி—அருண் மொழியின் திருமணம் எளியமுறையில் நடைபெற்றது.

திருமண நாளில் சடையப்ப வள்ளலும் ஓரிடத்தில் நின்றபடியே ஆசிவழங்கினார். திலகவதியார் தன் மகன் கம்பரிடம் சடையப்ப அண்ணாவுக்கு உரிய சிறப்பு இங்கு இல்லையே! என்று கேட்ட நிலையில், "தாயே! எம் குருவுக்கு நான் இயற்றும் இராம காதையில் மிகச் சிறப்பு அளித்திருக்கிறேன். அவர் எப்பொழுதும் என்னை வாழ்த்திச் சிறப்பித்துக் கொண்டே இருப்பார்," என்று கூறியபடி சடையப்ப வள்ளலிடம் சென்று, மணமக்களை பக்கத்தில் வந்து வாழ்த்தியருள வேண்டினார். அம்பிகாபதிக்கு கி.பி. 882ல் திருமணம் நடைபெற்றது. தவிர்க்க முடியாத நிலையில் அம்பிகாபதி — அருண்மொழி இல்லற வாழ்வு நடைபெற்றது.

### ஆதித்த சோழன் உறையூரில் ஆட்சி

நிருபதுங்கன் அரசனின் மகளாகிய வீரமா தேவியைத் துணைவியாகப் பெற்ற நிகழ்ச்சியை முன்பே அறிந்திருக்கிறோம். ஆதித்த சோழனின் தந்தை விஜயாலய சோழன். உறையூரில் வாழ்ந்து அங்கு சோழ

ஆட்சியை நடத்திக் கொண்டிருந்தான். இந்நிலையில் கி.பி.881ல் விஜயாலய சோழன் திடீரென இறந்து விட்டதால், உடன் ஒரு மாற்றம் ஏற்பட ஆரம்பித்தது.

காஞ்சிபுரத்தில் ஆட்சி செய்த ஆதித்தசோழன் (விஜயாலயன் இறந்துவிட்டதால்) உறையூரில் சென்று ஆட்சி புரியும் நிலை ஏற்பட்டது. எனவே இளவரசன் பராந்தகனையும், கன்னரத்தேவனையும் காஞ்சி புரத்தில் ஆட்சிசெய்யப் பணித்து விட்டு, ஆதித்தசோழன் தனது இருதேவியருடனும், மகள் அமராவதியுடனும் உறையூர் சென்று ஆட்சியை நிலைநாட்டினார்.

### இராமாயணத்தை கம்பர் உருவாக்குதல்

இந்நிலையில் இராமாயணத்தை உருவாக்கிக் கொண்டிருந்த கம்பர் திருவெண்ணெய் நல்லூர்சென்று, அங்கு சடையப்ப வள்ளல் தந்த மண்டபத்தில், மாணவர்களைத் தேர்ந்தெடுத்து, பாடசாலை நடத்தி வந்தார். கம்பர் பணிக்கு எவ்வித இடையூறும் நேராதபடி சடையப்ப வள்ளல் உடனிருந்து காத்து வந்தார். கம்பர் அனுதினமும் சிறிது நேர நித்திரைக்குப்பின், அதிகாலையில் எழுந்து நித்திய கர்மங்களைச் செய்து காவியத்தை உருவாக்கினார்.

தம்முடைய சீடர்களாகிய மாணவர்களுக்கு ஏடும் எழுத்தாணியும் கொடுத்து, ஐம்பது, அறுபது, எழுபது பாடல்களைத் தாம் பாடி, எழுதச் செய்தார். இராமாயணம் எழுதி முடித்த நிலையில் அதற்குப் பல படிகள் எடுக்க வேண்டி கம்பர் தனது மாமனார் ஊரான திருவொற்றியூர் வடிவுடையம்மன் சன்னதிக்குச் சென்று

மாணவர்களைக் கொண்டு இராமாயணப் படிகள் எடுத்தார். மாணவர்களுடன் கம்பரும் உடனிருந்து இராமாயணப் படிகள் எடுக்கும் காட்சிப்படம் ஒன்றும் திருவொற்றியூர் கோவிலில் தற்போது உள்ளதைக் காணலாம். இரவிலும் எழுத்துப் பணி தொடர்வதற்காக வெளிச்சம் கிடைக்கத் தீவட்டி ஏந்தி உதவி செய்யுமாறு திருவொற்றியூர் தேவியை நோக்கிக் கம்பர் பாடிய பாடல்.

"ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே!
வெற்றியூர் காகுத்தன் தன்மெய் சரிதை – பற்றியே
நந்தாது எழுதுதற்கு நள்ளிரவில் மாணாக்கர்
பிந்தாமல் பந்தம் பிடி." – கம்பர் தனிப்பாடல்

இதே நேரத்தில் காஞ்சி அம்பியில், கம்பர் மகன் அம்பிகாபதி கலாசாலையைக் கவனித்து நடத்திக் கொண்டிருந்தான். அம்பிகாபதிக்கு அருண்மொழி பேருதவி செய்து வாழ்ந்து கொண்டிருந்தாள்.

இந்நிலையில் கம்பர் இராமாயண காவியத்தில் பாலகாண்டம் முதல் யுத்த காண்டம் வரை ஸ்ரீ ராமர் பட்டாபிஷேகம் உட்பட, 12 ஆயிரத்து பன்னிரெண்டு பாடல்களைப் பூரணமாய்ப் பாடி, அதற்குப் பல் படிகள் எடுத்துக்கொண்டு வைணவத் தலமாகிய ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றம் செய்ய எண்ணினார். முதற்கண் தனக்குப் பேருதவி செய்த சடையப்பரிடம் சென்றார் கம்பர். கதிர்வேய் மங்கலம் சென்றார். சடையப்ப வள்ளல் உடல் நலமின்றி இருந்த நிலையைக் கண்டு திடுக்கிட்டார் கம்பர். சடையப்ப வள்ளல் உடன் வந்து அரங்கேற்றத்தை நடத்துவார் என்று கருதிய நிலை,

இப்பொழுது மாறுபட்டிருப்பதை அறிந்தார் கம்பர். சடையப்ப வள்ளல் வரமுடியாத நிலையில் தன் தம்பி சரராமனை உடன் அழைத்துச் செல்லும்படி கூறி பணஉதவியும் செய்தார்.

ஸ்ரீரங்கத்தில் இராமாயண அரங்கேற்றம்

பின் கம்பர் சுரராமனுடன் புறப்பட்டு, உறையூரை ஆண்ட ஆதித்த சோழனுடைய அரண்மனைக்குச் சென்றார். ஆதித்த சோழன் வரவேற்றுக் கம்பரை அமரவைத்தார். கம்பர் தன் காவியத்தை ஸ்ரீரங்கத்தில் சென்று அரங்கேற்றம் செய்வதை எடுத்துக் கூறினார். அரசனும் சற்றுத் திகைப்படைந்தார். எனினும் கம்பருக்கு உதவி செய்வதாகக் கூறினார் அரசர். ஸ்ரீரங்கம் ஆலயத்தில் கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றுவதற்கு வேண்டிய ஆதரவும், உதவியும் செய்யும்படி, திருவரங்க வைணவ ஆசாரியரான ஸ்ரீமத் நாதமுனிகளுக்கு ஓர் ஓலை எழுதச் செய்து அந்த ஓலையைக் கம்பரிடம் அரசர் கொடுத்தார்.

அரசர் நேரில் உதவி செய்வார் என்று கம்பர் முதலில் எண்ணினார். இப்பொழுது அனுமதி ஓலையை மட்டும் பெற்றுக் கொண்டு அரசர் தந்த நிதியையும் பெற்றுக்கொண்டு ஸ்ரீரங்கம் வந்தார் கம்பர். கம்பருடன் சடையப்ப வள்ளலின் தம்பியாகிய சரராமனும், கற்றுச் சொல்லிகள், சீடர் இருவரும் துணைபுரிய உடன் வந்தனர் என்பதை அறிகிறோம்.

கம்பர் ஸ்ரீரங்கத்தில் சென்று தான் இயற்றிய இராமகாவியத்தை அரங்கேற்றப் படாத பாடுபட்டார் என்பதை அறிகிறோம். ஓர் நூல் இயற்றுவதை விட

அதனை உலகமக்கள் ஏற்கும் வண்ணம் அரங்கேற்றம் செய்வது மிகக் கடினமான செயலாக அக்காலத்தில் இருந்தது, இராமாயணத்தைக் கம்பர் அரங்கேற்ற அலைந்த அலைச்சல், சொல்லமுடியாத துன்ப வரலாறாக அமைந்தது. இதனை அடியேன் 50வது படைப்பான (மணிமேகலை பிரசுரத்தில் 2003ம் ஆண்டு வெளியான) 'கவிச்சக்கரவர்த்தி கம்பனின் கவிநயம்) என்ற நூலிலே விளக்கமாகத் தந்துள்ளேன்.

மேலும் வனிதா பதிப்பகப் படைப்பாக 2003ல் வெளியிட்ட கம்பன் வரலாற்றில் கவினுறு நிகழ்ச்சிகள் என்ற 63வது வெளியீட்டில், கம்பர் தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும், கம்பராமாயண அரங்கேற்றத்தைப் பற்றிய நிகழ்ச்சிகளையும் குறிப்பிட்டிருக்கிறேன். இப்பொழுது சுருக்கமாகத் தந்து அம்பிகாபதியின் வரலாற்றையும் அறிய இருக்கிறோம்.

கம்பர் தம் சகாக்களுடன் ஸ்ரீரங்கம் சென்று அங்கு கோவில் மடாதிபதியாகச் சிறப்புப் பெற்ற ஸ்ரீமந்நாத முனிவர்களிடம் வெளியிட அனுமதி கேட்ட போது, அவரும் மற்றும் கோவில் வைணவர்களும், இராமாயணம் சிறப்பாக அரங்கேற, தில்லைவாழ் அந்தணர்கள் அனைவர்களிடமும் ஒப்புதல் பெற்று வர வேண்டும் என்று கூறினார்கள். 'சைவர்களாலும் அது போற்றப்பட வேண்டும். எனவே அவர்கள் ஒப்புதல் கையெழுத்து பெற்று வாருங்கள்' என்று கம்பரிடம் கூறினார்கள்.

வேறு வழியின்றி, கம்பர் தில்லை சென்றார். தில்லை வாழ் அந்தணர்கள் ஓரிருவரைச் சந்திக்கும்

நிலையில், மூவாயிரம் அந்தணர்களையும் தாங்கள் காண வேண்டும் என்ற கருத்தை அவர்கள் கூறினார்கள். மூவாயிரம் அந்தணர்களை ஒருசேரக் காண்பது எப்படி? கலங்கினார் கம்பர். அன்று இரவு வரதராஜப் பெருமாளே கம்பரின் கனவில் காட்சி தந்து "நாளை தில்லை வாழ் அந்தணர்களின் தலைவரான ஒருவரின் மகன், பாம்பு கடியுண்டு இறந்து விடுவான். அதனால் தில்லை வாழ் அந்தணர்கள் அனைவரும் அங்கு கூடுவர். இராமாயணத்தில் சில பாடல்களை நீ பாடினால் உயிர் பெற்று வருவான். அப்போது கம்பரே! நீ அனைவரிடமும் கையெழுத்து வாங்கி விடலாம் கலங்காதே" என்று கூறி மறைந்தார். கம்பர் அவ்வாறே இறந்து கிடந்த தில்லை வாழ் அந்தணன் ஒருவரின் மகன் முன் இராமாயணத்தில் நாகபாசப் படலத்தின் பாடல்களைப் பாடி உயிர் பெறச் செய்தார். இதனால் தில்லை வாழ் அந்தணர் அனைவருடைய ஒப்பந்தக் கையெழுத்தைக் கம்பர் பெற்றுச் ஸ்ரீரங்கம் வந்தார்.

எனினும் ஸ்ரீரங்கத்தில் வைஷ்ணவர்கள் ஸ்ரீரங்க கோவிலில் விருப்பமுடன், தொடர்புடைய, திருநறுங் கொண்டை என்ற தலத்தில் வாழும் சமணர்களின் ஒப்புதல் கையெழுத்து வாங்கி வரவேண்டுமென்று சொன்னார்கள். கம்பர் அங்கும் சென்று அவர்கள் முன் பாடி ஒப்புதல் கையெழுத்துப் பெற்றார்.

அடுத்து ஸ்ரீரங்கம் கோவிலில் கருமான் பணி புரிபவரும், தமிழ்ப் பண்டிதருமாகிய மாமண்டூர் கருமானிடம் சென்று பாடி, ஒப்புதல் கையெழுத்து வாங்கி வரப் பணித்தார்கள். கம்பர் கற்றுச் சொல்லி

களுடன் மாமண்டூர் சென்று, அவர்களுக்கான இராமாயணத்திலுள்ள பகுதியைப் பாடி, ஒப்புதல் கையெழுத்து வாங்கி வந்தார். அடுத்து, ஸ்ரீரங்கம் கோவிலில் ஆடல் — பாடல் புரியும் தஞ்சாவூர் அஞ்சனாட்சி என்ற தாசியிடம் கையெழுத்து வாங்கி வரவேண்டுமென்று கூறக் கம்பரும் தஞ்சாவூர் சென்று அஞ்சனாட்சி என்ற தாசியிடம் மிதிலையில் பெண்கள் தெருவில் நடத்திய பந்தாட்டக் காட்சியின் நயத்தைக் கூறி அவளிடமும் கையெழுத்து வாங்கி வந்தார்.

மேலும் சோதனை. ஸ்ரீரங்கத்திலும் ஸ்ரீமந்நாத முனிவர் மற்றும் வைணவப் பெரியோர்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் இராமாயணத்தின் காட்சியை இயைபுப்படுத்தி, அவர்களையும் வியக்க வைத்தார். கம்பன் மகன் அம்பிகாபதியிடமும் ஒப்புதல் கையெழுத்து வாங்கி வரவேண்டுமென்றார்கள். கம்பர் இரு மாணவர்களை அனுப்பி, காஞ்சிபுரம் அம்பியில் கலாசாலை நடத்திக் கொண்டிருந்த மகனையும் வரவழைத்தார். அம்பிகாபதி இரண்டு சொற்கள் அடங்கிய இரட்டைக்கிளவிப் பாடல்களில் விருப்பமுடையவன். எனவே தன்முன் வந்த மகன் அம்பிகாபதியிடம் இராமாயணத்தில் இரட்டைக்கிளவி அமைந்த நான்கு பாடல்களைப் (சளசள, களகள, குளுகுளு, கிளு கிளு என்ற சொற்கள் வரும் பாடல்களை) பாடி அவனையும் மகிழ்வித்து ஒப்புதல் கையெழுத்து வாங்கினார். அதன் பின் அம்பிகாபதி இராமாயணம் அரங்கேற்றம் நடைபெறும் வரை சிறிது உடனிருந்து தொண்டு புரிந்தான் என்பதை அறிகிறோம்.

இந்நிலையில் ஆதித்த சோழன் தான் கூறியபடி ஸ்ரீரங்க ஆலயத்தில் கம்பர் இராமாயண அரங்கேற்ற மண்டபத்தை அங்கு கட்டித் தந்தார் என்பதையும் அறிகிறோம்.

இத்தகு செயல்கள் எல்லாம் நடைபெற்ற நிலையில் ஸ்ரீமந்நாதமுனிவரும், வைணவர்களும் கம்பராமாயண அரங்கேற்றத்திற்கு ஒப்புதல் அளித்தனர். இதன்பின் பலவிடங்களுக்கும் அரங்கேற்றம் பற்றி அழைப்பு அனுப்பப்பெற்றது, ஆதித்த சோழன், அவன் தேவியர்கள், சேர அரசன் தாணுரவி, அரசி, பாண்டிய மன்னன், பல்லவமன்னன் அனைவரும் அரங்கேற்றத்திற்கு அவ்வப்போது வந்து சிறப்புவித்தனர். சடையப்ப வள்ளல் உடல் நலமில்லா காரணத்தினால் வாழ்த்துச் செய்தி மட்டும் அனுப்பியிருந்தார்.

ஆதித்தசோழன் திருவரங்க ஆலயத்தில் கட்டி யிருந்த கம்பராமாயண அரங்கேற்ற மண்டபத்தில் ஸ்ரீமந்நாதமுனிவர் முன்னிலையில் சேர, சோழ, பாண்டிய அரசர்கள் சிலர் முன்னிலையில் கம்பர் அரங்கேற்றத்தைத் தொடங்கினார். சுவடியைப் பிரித்துத் திறந்தார்.

அந்த நேரத்தில் ஸ்ரீரங்க ஆலய அர்ச்சகர் ஒருவர் உடலில், ஸ்ரீவரதராஜப் பெருமாள் புகுந்து பின்வரும் குரலை எழுப்ப, அனைவரும் கேட்டனர். "கம்பா! நீ நம் ஆழ்வார் சடகோபனைப் புகழ்ந்து பாடினையோ? பாடினால்த்தான் நாம் உனது இராமாயணத்தைத் திருவுளம் பற்றுவோம்" என்று கூறி ஆர்ப்பரித்து, அந்த

அர்ச்சகர் அமரக் கண்டோம். இக்குரலை அனைவரும் கேட்டனர்.

### ஸ்ரீ சடகோபர் அந்தாதி வெளியிடல்

ஸ்ரீஅரங்கநாதர் வாக்கால், அர்ச்சகர் ஒலித்த, குரலைக் கேட்ட நிலையில் கம்பர் எழுந்து, அனைவரையும் நோக்கி "இன்னும் சிறிது நேரத்தில் ஸ்ரீசடகோபர் அந்தாதி பாடுவேன். அதனையடுத்து நாளை உத்தரத்தில் இராமாயணத்தைத் தொடங்குவேன்" என்று கூறிவிட்டு, கைகூப்பியவாறே ஸ்ரீஅரங்கநாதன் சன்னதிக்குச் சென்று, பிரார்த்தித்தார்.

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரும், திருவிருத்தம் திருவாசிரியம்,பெரியதிருவந்தாதி,திருவாய்மொழிஎன்ற நான்கு பிரபந்தங்களைத் தந்தவருமாகிய நம்மாழ்வார் ஸ்ரீசடகோபரைப் போற்றி நூறு கட்டளைக் கலித் துறையில் அந்தாதி பாடினார். நம்மாழ்வார் சடாயுவை கோபித்த காரணத்தினால் சடகோபர் என்ற பெயரைப் பெற்றார்.

இதனால் கம்பர் இராமாயணத்தைப் பாடுவதற்கு முன் ஸ்ரீசடகோபர் அந்தாதியைப் பாடி முடித்துப் பெருமை பெற்றார் என்பதையும் நாம் அறிகிறோம். கம்பர் இயற்றிய சடகோபரந்தாதியின் மூலம் திருவாய் மொழிக்கு உயர்வு ஏற்பட்டதால் ஸ்ரீரங்கத்தில் அது சம்பந்தமான விழாக்களும் இன்றும் தொடர்ந்து நடத்தக் காணுகின்றோம்.

இராமாயணம் அரங்கேற்றம்

ஸ்ரீ சடகோபர் அந்தாதி அரங்கேறிய மறுநாளே, கம்பராமாயணம் அரங்கேற்றம் தொடங்கியது. பரம் பொருள் வணக்கம் பாடி அரங்கேற்றத்தை ஆரம்பித்தார் கம்பர்.

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே"

என்று தொடங்கி குருவணக்கம், அனுமன்துதி, அவை யடக்கம், நூல் வரலாறு—இவற்றைப் பாடி, பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தரகாண்டம், யுத்த காண்டமென மொத்தம் 12 ஆயிரத்து பன்னிரண்டு பாடல்களைப் பாடி இனிதே அரங்கேற்றம் செய்தார்.

அரங்கேற்றம் சிறப்பாக முடிந்த நிலையில் ஸ்ரீமந் நாதமுனிகள் கம்பரைப் பாராட்டி கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டம் கொடுத்தார்.

அனைவரும் கம்பரை ஸ்ரீரங்கநாதர் சன்னதிக்கு அழைத்துச் சென்றனர். சுவாமிக்கு திருமஞ்சனம் சமர்ப்பித்து, ஸ்ரீரங்கநாதரையும், ஸ்ரீரங்க நாயகியையும் பிரணவாகார விமானத்தில் எழுந்தருளச் செய்து, கம்பருடைய இராமாயணச் சுவடிகளை சுவாமி திருவடியில் சமர்ப்பித்து, விசேஷ பூஜை செய்து, கம்பருக்கும் விசேஷ மரியாதை செய்வித்தார்கள். கம்பரும் மகிழ்வுடன் மரியாதைகளை ஏற்றுக் கொண்டார்.

இராமாயணம் அரங்கேறிய இடத்தையும், காலத்தையும், தலத்தையும் குறித்து ஸ்ரீரங்க வைணவர் கீழ்க்கண்ட பாடலைப் பாடியுள்ளார்.

"எண்ணிய சகாத்த மெண்ணூற்
றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர்
தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை
பங்குனி யத்த நாளில்
கண்ணிய வரங்கர் முன்னே
கவியரங் கேற்றி னானே"

முதன் முதலில் சடையப்ப வள்ளல் வாழ்ந்த கதிர்வேய்மங்கலமாகிய திருவெண்ணெய் நல்லூரில் இயற்றிய இராமாயணத்தை, ஸ்ரீரங்கத்திலுள்ள கம்பர் இராமாயண அரங்கேற்ற மண்டபத்தில், சாலிவாகன சகாத்தம் 807ம் ஆண்டு (கி.பி. 885ம் ஆண்டு பங்குனி உத்திரத்தில்) அரங்கேற்றம் நடைபெற்றது.

கம்பர் கதிவேய்மங்கலம் வருதல்

கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்கு தந்தத்தாலான பல்லக்கு, வெண்கொடை, வெண்சாமரம், சிவிகை, கவிகை, துவசம், கவசம், தங்க சிங்காதனம், தண்டை முதலியன வழங்கப்பட்டன. ஸ்ரீரங்கத்திலிருந்து தேரழுந்தூருக்குக் கம்பனை வழியனுப்ப, ஸ்ரீரங்கம் விழாக்கோலம் பூண்டது. யானை, குதிரை புடைசூழ கம்பனுக்கு ஆதித்த சோழனும் அவன் தேவியும், சேரன் தாணுரவியும், அவன் தேவியும் பல்லக்கைத் தூக்கி வழியனுப்பினார்கள்.

தந்தத்தாலான பல்லக்கில் கவிச்சக்கரவர்த்தி கம்பர் வழியனுப்பப்பட்ட இடத்திலிருந்து பவனி சென்ற வழியில் உள்ள நிலங்களுக்கு எல்லாம் உரிய வரிகளைச் சோழ அரசன் நீக்கினான்.

மழையால் காவேரி நதி பொங்கி வந்து, ஊர்கள் எல்லாம் ஆபத்தான நிலை ஏற்படுவதை அறிந்த கம்பர்,

“கன்னி அழிந்தனள் கங்கை திரும்பினள்
பொன்னி கரையழிந்து போனாலென்? – இந்நீர்
உரை கடக்கலாமோ? உகுடையதாயே
கரை கடக்கலாகாது காண்”
– கம்பர் தனிப்பாடல்

மேற்கண்ட பாடலைக் கம்பர் பாடியதும் மழை பெய்வது நின்றது. காவேரி நதி அமைதி கொண்டது. என்னே வியப்பு!

ஆதித்த சோழன் மகிழ்ந்து திருமண வரியை கம்பருக்குப் பரிசாகத் தந்தான். தலைப்பாகை கட்டிக் கம்பர் பல்லக்கில் தேரழுந்தார் வரைப் பவனி வரக்கண்டோம். தேரழுந்தார் வந்ததும் கம்பர் பல்லக்கிலிருந்து இறங்கினார். கம்பர் தலைப் பாகையைக் களைந்து, சாதாரணக் கம்பராக, தேரழுந்தூர் ஆமருவியப்பன் ஆலயம் வந்தார். கோவிலினுள் கரங்குவித்துப் பணிந்து, மாலை மரியாதைகளைப் பெற்றார் கம்பர். அப்போது அங்கு வந்த, (கம்பர் மாளிகையைப் பொறுப்புடன் கட்டிக் கொடுத்தவரான) நாட்டாமை நல்ல முத்துவைக் கட்டித் தழுவி, பொன்னாடை போர்த்திக் கம்பர் கவுரவித்தார். மேலும் வழி நெடுக வந்த கிராமத் தொழிலாளர்களின்

நலம் விசாரித்து, கம்பர் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி சிறப்புவித்தார்.

கதிர்வேய் மங்கலமாகிய திருவெண்ணெய் நல்லூர் வந்ததும் பரிவாரங்களை நிறுத்திவிட்டு, தான் மட்டும் சாதாரண உடையில் சடையப்ப வள்ளலுடைய வீட்டுக்கு வந்தார். சடையப்ப வள்ளலின் காலில் விழுந்து வணங்கினார். சடையப்ப வள்ளல் கம்பனைத் தழுவி "இப்பொழுது நான் உன் வரவால் உடல்நலம் பெற்றேன்" என்று கூறிக் கைகூப்பினார்.

### ஆதித்தசோழன் அரண்மனை நந்தவனத்தில் அம்பிகாபதி, அமராவதியைச் சந்தித்தலும், அதன் விளைவுகளும்

காஞ்சியில் கம்பர் தான் நடத்திய கலாசாலையை, தன் மகன் அம்பிகாபதியிடம் ஒப்படைத்தார். அம்பிகாபதி கலாசாலையைத் திறம்பட நடத்தி வந்தான். ஒவ்வொரு ஆண்டும் சீடர்களுக்குத் தேர்வுநடத்தி, ஆண்டுதோறும் ஒரு மாதம் குருகுலத்திற்கு விடுமுறை அளிப்பது வழக்கம்.

ஒரு விடுமுறையின் போது அம்பிகாபதி காஞ்சியிலிருந்து சொந்த ஊரான தேரழுந்தூருக்கு குதிரையில் வந்து சேர்ந்தான். நாட்டாமை நல்லமுத்துவின் மேற்பார்வையில் அங்கு கட்டிக் கொண்டிருந்த 'கம்பர் மாளிகை'யை கண்டு வியப்புற்றான். நல்லமுத்துவைச் சந்தித்த பின், உறையூரில் ஆட்சி செய்து கொண்டிருந்த ஆதித்த சோழனுடைய அரண்மனை வந்து சேர்ந்தான் அம்பிகாபதி.

ஆதித்த சோழனுடைய அரண்மனை நந்தவனத்தில் அமராவதி தன் தோழிகளுடன் தாமரைத்தடாகத்தில் நீராடிக் கொண்டிருந்தாள்.

அப்போது அம்பிகாபதி அரண்மனையினுள் நுழைந்து அமராவதி இருக்குமிடத்தை விசாரித்துத் தடாகத்தை நோக்கி வந்தான்.

தடாகத்தில் நீந்திக் கொண்டிருந்த அமராவதி நிமிர்ந்து பார்த்தாள். எதிரே அம்பிகாபதி வருவதைக் கண்டு முகமலர்ந்த அமராவதி, கரைக்கு வந்து உடையை மாற்றிக் கொண்டு, தாதிகளுடன் அம்பிகா பதியை நோக்கி வந்தாள். தாதிகளை அனுப்பிவிட்டு அமராவதி, அம்பிகாவதி அமர்ந்த இடத்திற்கு வந்தாள். அம்பிகாபதி அமராவதியைக் கட்டித் தழுவிய நிலையில் கவிபாடி அமராவதி அழகை வர்ணித்தான்.

அமராவதி துக்கம் தாளாமல் விக்கி அழுதாள். "நானே உன்னைத் திருமணம் செய்து கொள்கிறேன். கவலைப்படாதே!" என்று கூறி அமராவதியின் கண்களைத் துடைத்தான்.

அம்பிகாவதி — அமராவதி காதல் காட்சியை மறைந்து பார்த்துக் கொண்டிருந்த ஒரு தாதி, உடனே சென்று, அமராவதியின் தாயாகிய இளங்கோபிச்சியிடம் தெரிவித்தாள். உடனே இளங்கோபிச்சி கன்னிமாடம் சென்று பார்த்தாள். அப்போது அமராவதியைத் தேற்றியபடி அம்பிகாபதி வந்து கொண்டிருந்தான்.

அமராவதியின் தாயார் இளங்கோபிச்சி உடனே பதைத்தபடியே விரைந்து சென்று, ஆதித்த சோழனுடைய முதல் மனைவியாகிய அக்காளிடம்

(வீரமாதேவியிடம்) விஷயத்தைக் கூறி விசாரிக்குமாறு வேண்டினாள்.

உடனே வீரமாதேவி விரைந்து வந்து அம்பிகா பதியையும், அமராவதியையும் கண்டு அவர்களை அழைத்துக் கொண்டு தன் அறைக்குள் நுழைந்தாள். அவர்களைத் தனித்தனியே அமரவைத்து சிற்றுண்டி கொடுத்தாள். அதே நேரம் அமராவதியின் தாயாகிய இளங்கோபிச்சியும் அங்கு வந்து சேர்ந்தாள். அம்பிகாபதி யும், அமராவதியும் கைகூப்பி வணங்கினர்.

அப்போது வீரமாதேவி அம்பிகாபதியை நோக்கி, "உன் மனைவி அருண்மொழி சவுக்கியமா? அவள் பிள்ளை உண்டாகி இருக்கிறாளாமே? எத்தனை மாதம்?" என்று கேட்டாள்.

அதைக் கேட்டுத் திகைத்த அம்பிகாபதி, "ஆமாம் மனைவி சவுக்கியமே! அடுத்த மாதம் பிரசவம்!" என்று தடுமாறியபடியே கூறினான்.

உடனே வீரமாதேவி "அம்பிகாபதி, உன் தாய் திலகவதியார் படுத்த படுக்கையாக இருக்கிறார் என்று கேள்விப்பட்டேன். தாயார் நோகும்படி நீ நடக்கலாமா? நீ அமராவதியை மறந்து விடு" என்று கூறினாள்.

அப்போது அருகிருந்த அமராவதி, வீரமாதேவியின் காலைப்பிடித்து "அம்மா! நான் வாழ்ந்தால், அம்பிகா பதியோடுதான் வாழ்வேன்! எங்களைப் பிரிக்க வேண்டாம்!" என்றாள்.

உடனே வீரமாதேவி "மகளே! அவன் திருமணம் ஆனவன்! மன்னருக்குத் தெரிந்தால் உன் உயிருக்கே ஆபத்து வரும், உள்ளே போ!" என்று கூறினாள்.

பின் வீரமாதேவி அம்பிகாபதியைப் பார்த்து "அம்பிகாபதி, நீ உடனே இங்கிருந்து புறப்படு. இனி இங்கு நீ வரவேண்டாம் ...ம் புறப்படு!" என்று கூறியபடியே அமராவதியின் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு வீரமாதேவி அரண்மனையினுள் புகுந்தாள். இளங்கோபிச்சியும் அமராவதியின் முதுகைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு உள்ளே சென்றாள். இதைக் கண்ட அம்பிகாபதி உடனே அங்கிருந்து வெளியே வந்து விட்டான். செய்வதறியாது குதிரையின் மீது ஏறிப் புறப்பட்டான். நொந்த நிலையில் காஞ்சிபுரம் அம்பியில் உள்ள கலாசாலைக்கு வந்து சேர்ந்தான்.

அம்பிகாபதியின் மகன் தண்டியின் பெருமை

அம்பிகாபதி காஞ்சிபுரம் அம்பியில் கலா சாலையைத் திறம்பட நடத்தி வந்தான். ஒரு மாதத்தில் காஞ்சிபுரம் அம்பியில், கம்பர் மாளிகையில், அம்பிகாபதிக்கும் அவன் மனைவி அருண்மொழி நாச்சியாருக்கும் ஆண்குழந்தை பிறந்தது. தண்டி என்று பெயர் சூட்டினர். "ஏற்கனவே அருண்மொழி நாச்சியாருக்கு ஆண்குழந்தை பிறக்கும்" என்றும், "அக்குழந்தை தந்தை அம்பிகாபதியைப் போல கல்வி யிலும் கலைகளிலும் சிறந்து விளங்குவான்!" என்றும் சோதிடர்கள் கூறியிருந்தனர்.

அம்பிகாபதி ஏற்கனவே தமிழன்னையைச் சிறப்பித்து 'அம்பிகாபதிக்கோவை' என்ற காவியத்தை எழுதி, போற்றப் பெற்றிருந்தான். அம்பிகாபதிக்குப் பிறந்த மகனான தண்டி பிற்காலத்தில் அன்னைக்கு இலக்கணத் தமிழ்நூல் ஒன்று எழுதிப் பேரும் புகழும்

பெற்றான். தமிழன்னைக்கு தண்டி எழுதிய இலக்கண நூலே தமிழறிஞர்களால் போற்றப் பெற்றுவரும் 'தண்டியலங்காரம்' ஆகும்.

அம்பிகாபதியின் தந்தை இயற்றிய இராமாயணம், ஏரெழுபது, திருக்கைவழக்கம், கம்பருக்குப் பெரும் புகழைக் கொடுத்தன. அம்பிகாபதியின் மகன் தண்டி இயற்றியதண்டியலங்காரம்தமிழன்னைக்குச்சுவையான, இலக்கண நூலாய் ஒளிர்வதைக் காணுகின்றோம். தமிழில் இயற்றப்பெற்ற வீரசோழியம், மாறனலங்காரம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், குவலயானந்தம், சந்திராலோகம், முத்துவீரியம் போன்ற தமிழின் அணி இலக்கண நூல்களுக்கு எல்லாம் சிகரமாகத் திகழ்கிறது தண்டி இயற்றிய தண்டியலங்காரமாகும்.

எடுத்துக் காட்டாகத் தண்டியலங்காரத்தின் 242வது பாடலைக் காண்போம்.

பாடல்

காக்கைக் கா காகூகை கூகைக்கா காகாக்கை
கோக்குக் கூ காக்கைக்குக் கொக்கொக்கக் – கைக்கைக்குக்
காக்கைக்குக் கைக் கைக்காக கா

– 242வது தண்டிப்பாடல்

பாடல் கருத்து:

காக்கை இனத்திற்கு ஆற்றா கூகை (ஆந்தை) இனம், ஆந்தை இனத்திற்கு ஆற்றா காக்கை இனம், இரண்டும் கால வசத்தால் ஆனதாகும். பெரிய மீன்வரும் வரை காத்துக் கொண்டிருக்கின்ற கொக்கு இனத்தைப்

போன்று நாட்டை ஆளும் அரசனும் பகைவரிடமிருந்து பூமியைக் காக்கத் தக்க காலத்தை நோக்கியிருப்பதை அறிவோம்.

மேற்கண்ட பாடலைத் தண்டியடிகள் ககர விகற்பத்தான் இயற்றிய மடக்குச் செய்யுளாகும்.

பகல் காலத்தில் காகம் கரையும். மேலும் கண் தெரியாத ஆந்தையை எளிதில் காகம் வெல்லும். இரவு நேரத்தில் ஆந்தை காகத்தை வெல்லும். அதே போல நாட்டை ஆளும் அரசனும் எதிரியை வெல்ல தக்க காலத்தை எதிர்பார்த்துச் செயல்புரிவான். இதனை வள்ளுவரும்,

> "பகல்வெல்லும் கூகையைக்காக்கை இகல் வெல்லும்
> வேந்தர்க்கு வேண்டும் பொழுது." – குறள் 481

என்று குறிப்பிடுகிறார். மேலும்

> "கொக்கு ஒக்க கூம்பும் பருவத்து மற்றும் அதன்
> குத்துஒக்க சீர்த்த விடத்து." – குறள் 490

மேற்கண்ட குறளில் நீரோட்டத்தில் வரும் சிறிய மீனைப் பற்றாது காத்திருந்து, கொக்கானது பெரிய மீன் வந்தபோது தவறாது அதனைப் பற்றும் என்பதை அறிவோம்.

பாடலை இயற்றத் தக்க சொற்களைத் தக்க இடத்தில் பயன்படுத்தி இலக்கண அமைப்போடு புலப்படுத்துவது புலவனது ஆற்றலாகும் என்பதை விளக்க தண்டியலங்காரத்தில் தண்டி குறிப்பிடுவதைக் காணுகின்றோம்.

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்று முறையிலே, தண்டியலங்காரத்தில் உள்ள ஒரு பாடலை இங்கு எடுத்துக் காட்டி அம்பிகாபதி மகன் தண்டியடிகள் தன் பெருமையைக் கூற அறிகின்றோம்.

இராமாயணத்தை இயற்றிய கம்பரும், அம்பிகாபதிக் கோவையை இயற்றிய அம்பிகாபதியும், தண்டியலங்காரம் என்ற இலக்கண நூலை இயற்றிய அம்பிகாபதியின் மகன் தண்டியும், (மூவரும்) போற்றத் தகுந்தவர்கள் என்பதை உலகம் அறிந்து பாராட்டுவதை அறிகிறோம்.

அம்பிகாபதியின் கவியாற்றல்

கம்பருடைய மகன் அம்பிகாபதி கவியாற்றல் பெற்றவன் என்பதை, கம்பராமாயணம் ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றுவதற்கு முன் ஒப்புதல் பெறுவதற்காக, கம்பர் தன் மகனிடமும் இரட்டைக்கிளவி பாடல்கள் நான்கினை கம்பராமாயணத்திலிருந்து எடுத்துக்கூறி தன் மகனுடைய ஒப்புதலையும் பெற்றார் என்பதை அறிவோம். அப்போது இராமர் — சீதை வரலாறு, இராவணனுடன் போர்புரிந்த வரலாறு, இவற்றைக் கூறும் கம்பருடைய காதை அரங்கேற்றுவதற்கு நாடு பெற்ற பெரும் பாக்கியமே என்ற கருத்தில், சாற்றுக்கவி ஒன்றும் கொடுத்து அதன் பின் தொண்டாற்றக் கண்டோம்.

சோழ அரசன் ஆதித்தனும், தன் மகன் அம்பிகாபதி யின் கவியாற்றலை அறிவதற்காக, கம்பர் தன் மகனை அரசவைக்கு அழைத்துச் சென்றார். அரசன்

அம்பிகாபதியிடம் "தம்பி! நீ விஷ்ணு எங்கெங்கு உறங்கினார்? அதனை கவிபாடித் தெரிவிப்பாயாக!" என்று கேட்டார்.

உடனே அம்பிகாபதி பால்போன்ற தூயவளும், குயிலின் குரலைப் போல் இன்சொல் பேசுபவளுமாகிய இலக்குமியை விட்டு, காம ஆசையை அடக்கும் நிலையில் திருமால் வெவ்வேறு சமயங்களில் ஆல இலையிலும், பாற்கடல் நடுவே பாம்பின் படுக்கையிலும், பசுமேய்க்கும் பொழுது புல்லாங்குழல் இசையால் வயப்படுத்திய நிலையிலும், தன் ஆற்றலை வெளிப்படுத்திப் பள்ளி கொண்ட நிலையைக் கீழ்க் கண்ட அகத்துறைப் பாடலால் அறிகிறோம். அப்பாடல்:

"பாலினும் இன்சொல் குயிலினும்
மென்மொழிப் பாவை நல்லாள்
மேலினும் காமன் அம்பு தைக்குமோ?
வடவேங்கடம் விட்டு
ஆலினும் வேலை நடுவினும்
பாம்பினும் ஆத் தூரத்துங்
கோலினும் கண் வளர்வாய்
மழவா பள்ளி கொண்டவனே"

— என்று அம்பிகாபதி பாடினாள்.

தான் குறித்தபடி, விஷ்ணு பள்ளி கொண்ட இடங்களைப் பாடிய அம்பிகாபதியின் கவியாற்றலைக் கேட்டு அரசன் மிக்க மகிழ்வடைந்தான். வருடங்கள் உருண்டோடின. ஆதித்த சோழன் தன் மகள் பருவமடைந்த காரணத்தினால் கன்னிமாடத்துள் அவளைத் தங்கச் செய்தான்.

ஆதித்த சோழன் தன் அவைப்புலவர்கள் மூலம் அறிந்த 'கண்டகத்தி' என்றும் பாடலின் சிறப்பை அறிய விரும்பினான். அப்பாடல் நான்கு அடிகளைக் கொண்டது. நான்கடிகள் கொண்ட அப்பாடலின் முதலிரண்டு அடிகளை ஒருவர் பாடவும், மற்றுமிரண்டு அடிகளை மற்றொரு புலவர் பாடவும் அமைவது தான் 'கண்டகத்திப்' பாடல் அமைப்பாகும். அதன் பெருமையைக் கம்பரின் வீட்டில் சென்று கேட்போம் என்று கருதிய அரசன் ஆதித்த சோழன் கம்பருடைய வீட்டிற்குச் சென்றான்.

கம்பருடைய வீட்டிற்குச் சென்ற அரசன், கதவைத் தட்டினான். வீட்டின் உள்ளே வராந்தாவில் படுத்துக் கொண்டிருந்த அம்பிகாபதி உடனே, அடுத்துப் படுத்துக் கொண்டிருந்த அப்பாவை நோக்கி,

"கரைக்கு வடக்கிருக்கும் காளிகா ளம்மைக்
கரைத்து வழி சாந்தைத் தொட்டபேய்

என்று வெண்பாவின் முதல் இரு அடிகளைப் பாடினான். அதைத் தொடர்ந்து கம்பர் கீழ் இரண்டு அடிகளைப் பாடினார்.

.... உரைத்தும்
மறைக்க வறியாத வன்பேயின் கையைக்
குறைக்குமாங் கூன்கத்தி கொண்டு!"

என்று பாடி முடித்தார்.

இதனைக் கேட்டதும் அரசன் வியப்படைந்து நாளை இதன் பொருளை கம்பரிடம் கேட்போம் என்று எண்ணி உடனே புறப்பட்டு வந்து விட்டார் அரசர்.

மேற்கண்ட வெண்பாவின் நான்கு அடிகளை இப்பொழுது அறிவோம்.

"கரைக்கு வடக்கிருக்கும் காளிகா ளம்மைக்
கரைத்துவழி சாந்தைத் தொட்டப்பேய்உரைத்தும்
மறைக்க வறியாத வன்பேயின் கையைக்
குறைக்குமாங் கூன் கத்தி கொண்டு"

இருவரால் தனித்தனியே பாடப்பெற்ற 4 வரி களைக் கொண்ட வெண்பாதான் 'கண்டகத்தி' என்ற பாடலாகும். அடுத்த நாள் சபையில் முதலிரண்டு வரிகளை அம்பிகாபதியும், பின் இரண்டு அடிகளைக் கம்பரும் பாடியதாக அறிந்து கொண்டார் அரசர். அதன் பொருளைக் கம்பரிடம் கேட்டு வியப்படைந்தார் அரசர். உடனே கம்பரிடம் "நாளை உன் மகனை அரச சபைக்கு அழைத்து வா! சிறப்பு செய்வோம்" என்றார். கம்பரும் தன் மகனை அழைத்து வருவதாகக் கூறினார்.

அரச சபையில் அடுத்த நாள் நடந்த நிகழ்ச்சி

மறுநாள் கம்பர் தன் மகன் அம்பிகாபதியை அழைத்துக்கொண்டு அரண்மனை வந்தார். அரண் மனையினுள் முதலில் விரைந்து சென்றார். அம்பிகாபதி பின்னால் மெதுவாக வந்து கொண்டிருந்தான்.

இதே நேரத்தில் அம்பிகாபதி வரும்போது, ஆதித்த சோழனின் மகள் அமராவதி குறுக்கே வந்தாள். அப்போது யாரும் எதிர்பாராத வகையில் அம்பிகாபதி விரைந்து சென்று அமராவதியைக் கட்டித் தழுவினான். அமராவதி எதிர்பாராத நிலையில் தளர்ந்து நின்றாள் பின் அம்பிகாபதியின் பிடியிலிருந்து விலகிச் சென்றாள்.

அம்பிகாபதி அமராவதியைக் கட்டித் தழுவிய நிகழ்ச்சியை அரசன் அப்பொழுது அறியவில்லை. அம்பிகாபதியைப் பாராட்டி அனுப்பிய பின், மாலை நேரத்தில் அம்பிகாபதி தன் மகளைக் கட்டித் தழுவினான் என்பதை அறிந்து கோபமடைந்தார்.

### ஆதித்த சோழன் புலவர்களுக்கு விருந்து வைத்தல்

சோழ அரசன் தன்னுடைய சமஸ்தான வித்வான்களுக்கும் புலவர்களுக்கும் ஒரு விருந்து நடத்துவதாகவும், தன்னுடைய மகளே அனைவருக்கும் பந்தி போஜனம் பரிமாறப் போவதாகவும் அறிவித்தான்.

சமஸ்தானப் புலவர்களும் வித்வான்களும் அரச மாளிகைக்குச் சென்றனர். கம்பரும் தன் மகன் அம்பிகாபதியை அழைத்துக் கொண்டு விருந்துக்குச் சென்றார். அனைவரும் உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து விருந்துண்ண ஆரம்பித்தனர்.

சோழன் மகள் அமராவதி ஒரு தங்க வட்டிலில் பலகாரத்தை நிரப்பி அதனை இடது கரத்தில் பிடித்தபடி தன் இடையில் வைத்து, வலது கரங்கொண்டு பரிமாறுவதற்காக வந்து கொண்டிருந்தாள். பரிமாறினாள். அப்போது அதைக் கண்ட அம்பிகாபதி காதல் மயக்கத்தில், அவள் இடை வருந்த வந்து கொண்டிருந்தைக் கண்டு அனுதாபத்துடன் இரண்டு அடிகளில் பாடினான்.

“இட்டடி நோவ வெடுத்தடி
கொப்புளிக்க
வட்டில் சுமந்த மருங்கசைய...

என்று உரத்துப்பாட அதைக்கண்ட அரசன் கோபத் துடன் புலவர்களைப் பார்த்து “அம்பிகாபதி இப்படி கூறுவது சரிதானா?” என்று உரத்துக்கேட்டான்.

கம்பருக்குக் கலைமகள் அருள்புரிதல்

அப்போது கம்பர், அரசே என்னுடைய குமாரன் உங்களுடைய மகளைப் பற்றி இவ்வாறு பாடவில்லை. தெருவில் ஒரு கிழவி, கொட்டிக் கிழங்கு விற்றுச் செல்லும் காட்சியை வரும்போது கண்டதை நோக்கி, இப்பொழுது பாடினான். மீதியை நான் பாடுகிறேன் கேளுங்கள் என்று கூறி.

கொட்டிக்
கிழங்கோ கிழங்கென்று கூவுவாள் நாவில்
வழங்கோசை வையம் பெறும்”

என்று தொடர்ந்து கம்பர் பாடி முடித்தார்.

இதைக்கேட்ட அரசன் மேலும் கோபம் கொண்டு, ஒரு சேவகனிடம் “இப்போது கம்பர் கூறியது போல் தெருவில் ஒரு கிழவி கொட்டிக்கிழங்கு கொண்டு செல்கிறாளா என்று பார்த்து, அழைத்து வா!” என்றான். உடனே சேவகன் அங்கிருந்து சென்று தெருவை அடைந்தான்.

இந்நிலையில் கம்பர் கலைவாணியை மனதில் துதித்து அருள் வேண்டினார். வீதிக்கு வந்த சேவகன் அங்கு ஒரு கிழவி கொட்டிக்கிழங்கு விற்றுக் கொண்டு செல்வதைக் கண்டு அவளை அழைத்து, அரண்மனைக்கு வந்தான். அனைவரும் கொட்டிக் கிழங்கு விற்கும் கிழவியை கண்டு வியந்தனர்.

கம்பர் மனத்தில் துதித்தபடி கலைமகளே கொட்டிக்கிழங்கு விற்கும் கிழவியாக வந்து அருள் புரிந்திருக்கிறாள் என்று வாசகர்களாகிய நாம் அறிகிறோம்.

கம்பருக்கு கலைமகள்தான் அருள் புரிந்திருக்கிறாள் என்பதை அறிந்த அரசன் திடுக்கிட்டாலும் அடுத்து அம்பிகாபதியை எப்படி குற்றப்படுத்துவது என்று எண்ணிய நிலையில் தொடர்ந்து விருந்து நடைபெற ஏற்பாடு செய்தான் அரசன்.

அம்பிகாபதி அமராவதியைக் கட்டித் தழுவுதல்

விருந்து முடிந்தபின் அனைவருக்கும் சந்தனம் கொடுக்கப் பெற்றது. அம்பிகாபதி மேலே சட்டை அணியாமல் துண்டு போர்த்திய நிலையில் சந்தனத்தை உடல் முழுவதும் நன்றாகப் பூசிக் கொண்டான்.

அடுத்த அறையில் அமராவதி புலவர்களுக்கு தாம்பூலம் கொடுப்பதற்காக, தட்டு ஒன்றில் அடுக்கி வைத்துக் கொண்டிருந்தாள்.

அம்பிகாபதி மற்றப் புலவர்களுடன் அமர்ந்திருந்த நிலையில் அரசர் அம்பிகாபதியை நோக்கி, “அம்பிகாபதி, அடுத்த அறையில் தாம்பூலம் தயாராகி விட்டதா? என்று பார்த்துவா” என்று கூறினார். உடனே அம்பிகாபதி அறைக்குள் சென்றான். அங்கு அமராவதி தாம்பூலத்தட்டை தயாரித்துக் கொண்டு இருந்தாள். அறைக்குள் சென்ற அம்பிகாபதி தன் காதலியாகிய அமராவதியை மெய்ம்மறந்து ஆலிங்கனம் செய்தான். அமராவதியும் மெய் மறந்தாள். அப்போது தோழிகள்

அவளைப் பிடியிலிருந்து வில்க்க, அம்பிகாபதியும் நினைவு ஏற்று தாம்பூலத்தட்டை எடுத்துக்கொண்டு அறைக்கு வெளியே வந்தான். அரசன் அம்பிகாபதியின் மார்பை உற்றுக் கவனித்தார். சந்தனம் பூசிய அம்பிகாபதியின் வயிற்றில் தன் மகள் அமராவதி மார்பிலணிந்த மதாணி முதலிய ஆபரணங்களின் தழும்பு பதிந்திருப்பதைக் கண்டார்.

அம்பிகாபதியின் மார்பிலே தன் மகளின் ஆபரண வடுக்களைக் கண்ட அரசன், உடனே உண்மையறிந்தவனாய் அம்பிகாபதியைக் கடுமையாகத் தண்டிக்க எண்ணி, அருகிலிருந்த ஒரு புலவரை நோக்கி, "புலவரே! இவனை என்ன செய்யலாம்? கூறுக" என்று கேட்க, உடனே அப்புலவர்.

"பணிப்பகையும் திங்களுமே பார்த்த செயலானால்
உனக்கு நான் சொல்லுவ தொன்றுண்டோ – கணத்த
பிழை செய்தான் அன்னைக்குப்பின் பார்க்க வேண்டான்
கழுவினில் ஏற்றிவிடல் காண்!"

என்று கூறினார்.

### அம்பிகாபதிக்கு வாணி அருள்புரிதல்

உடனே அரசன் காவலர்களை நோக்கி அம்பிகாபதியைக் கழுவிலேற்றும்படி கட்டளையிட, அம்பிகாபதியை இழுத்துச் சென்றனர் காவலர்கள்.

அம்பிகாபதி கலைவாணியை நோக்கி வேண்ட, கழுமரம் தீப்பற்றி எரிந்தது. அரசன் உடனே கோபங் கொண்டு அம்பிகாபதியைக் கட்டிப்போட்டு யானை யால் இடறச் செய்யுங்கள் என்று கட்டளையிட்டான்.

எனினும் கலைவாணியின் அருளால் யானையும் பயந்து ஒதுங்கியது. அம்பிகாபதி அரசனை தூற்றிய வாறு தன் இல்லம் அடைந்தான். அரசவைப் புலவர்கள் கலைவாணியின் அருள் அம்பிகாபதிக்கு துணை நிற்பதை அறிந்து வியந்தனர்.

கம்பர் பிறந்த தேரழுந்தூரில் உள்ள ஆமருவி யப்பன் கோவிலில் கம்பருடைய சிலையும் மனைவி நிகர்த்தவல்லி சிலையும் இருப்பதை இன்று நன்கறிவோம். கோவிலின் வாயிலில் கம்பர் எழிலுடன் சிலையாகக் காட்சி தருகிறார். கம்பருடைய தாயார் திலகவதியார் நலிவுற்றுக் காலமானார்.

மீண்டும் அம்பிகாபதியும் அமராவதியும் சந்திப்பு

பலவாறு ஆதித்த சோழனால் துன்பமேற்று, கலைமகளால் துன்பம் நீங்கிய அம்பிகாபதி தன் காதலியின் நினைவால் ஏங்கினான்.

உறையூர் வெக்காளியம்மன் தரிசனத்திற்காக அமராவதி கோவிலுக்கு வந்துள்ளாள் என்பதை அம்பிகாபதி அறிந்தான். தேரழுந்தூரிலிருந்து அம்பிகாபதி குதிரை மீதேறி வெக்காளியம்மன் கோவிலுக்கு வந்தான். இதே நேரம் அமராவதி தன் தோழிகளுடன் எட்டுக் குதிரைகள் பூட்டிய வண்டியில் வந்தாள். முன்னும் பின்னும் காவலர்கள் குதிரைகளுடன் வந்தார்கள். அமராவதி இறங்கி தன் தோழிகளுடன் கோவிலுக்குச் சென்றாள். இதே நேரம் குதிரையிலிருந்து இறங்கிய அம்பிகாபதியும் கோவிலுக்குள் நுழைந்தான். தோழிகளுடன் வந்த அமராவதி, தன் தோழிகளைச் சாடை காட்டிவிட்டு

பக்கத்திலிருந்த மாமரங்கள் சூழ்ந்த பூந்தோட்டத்திற்குள் புக, அங்கு அம்பிகாபதியும் வர இருவரும் சிறிது நேரம் உரையாடினார்கள். அந்த நிலையிலும் மனம் ஒன்றி அம்பிகாபதி ஒரு பாடல் பாடினான்.

உருகி உடல் கருகி உள்ளீரல் பற்றி
எரிவ தறியாதென் செய்வேன் – வரிசுவை
நஞ்சிலே தோய்ந்த நளின விழிப்பெண் பெருமாள்
நெஞ்சிலே யிட்ட நெருப்பு (அம்பிகாபதி தனிப்பாடல்)

மேற்கண்ட பாடலில் அம்பிகாபதி தன் காதலியை நோக்கி தன் உடல் உருகி உள்ளீரல் பற்றி எரிவதாகக் காதலியை அணைத்துப் பாடினான். அமராவதி அழுதாள். நீ இல்லை என்றால் நான் தீயில் விழுந்து உயிர் விடுவேன் என்று அமராவதி கூறினாள். ‘அமராவதி நீ அவசரப்படாதே. உன் தந்தையிடமே நான் நேரில் கூறிச் சமாதானப் படுத்தி உன்னை ஏற்றுக் கொள்வேன்” என்று அம்பிகாபதி கூறினான்.

ஆதித்த சோழன் முன் அம்பிகாபதியும் அமராவதியும்

அம்பிகாபதியும் அமராவதியும் கூடியுள்ள நேரத்தில் இதையறிந்து ஆதித்த சோழனின் காவலன் ஒருவன் குதிரை மீதேறி ஆதித்தசோழனிடம் வந்து அம்பிகாபதியும், அமராவதியும் கூடியிருக்கும் செய்தியைத் தெரிவித்து விட்டான்.

உடனே ஒரு காவலனுடன் ஆதித்தசோழன் அங்கு வந்தான். காவலனிடம் “அம்பிகாபதியை உடனே கைது செய்து அழைத்து வா!” என்று கூறித் தன் மகளின் கரத்தைப் பிடித்து இழுத்துச் சென்றான் அரசன்.

அரண்மனையில் அரசன், அம்பிகாபதியை இழுத்து வரச் செய்தான். கம்பருக்கும் தகவல் தெரிவிக்கப் பெற்று அங்கு வந்து சேர்ந்தார். அமராவதியின் தாய் இளங்கோபிச்சியும் வந்திருந்தாள்.

அப்போது கம்பர் தன் மகனை நோக்கி "மகனே! உன்னை என் மகனாக அன்பு காட்டியதற்கு துரோகம் செய்து விட்டாய்! இப்பொழுது நீ அரசனிடம் மன்னிப்புக் கேள். விட்டு விடுவார்!" என்றார்.

"அப்பா! என்னை அரும்பாக இருக்கும் போதே, அமராவதி என்னைக் கரும்பாக எண்ணி இருக்கிறாள்? இப்பொழுது அவள் தன் உயிரையே மாய்த்துக் கொள்வதாக இருக்கிறாள். இப்பொழுது என் உயிராக அவளை எண்ணுகிறேன் எங்கள் காதலைப் பிரிக்க வேண்டாம். அரசரிடமும் இதையேதான் கூறுகின்றேன்" என்று அம்பிகாபதி கூறினான்.

அப்போது அரசன் கோபத்துடன் அம்பிகாபதியை நோக்கி, "நீ ஒரு மகனுக்குத் தந்தையாக இருக்கிறாய். என் மகனே, நீ அவளை நினைக்காதே, மன்னிப்புக்கேள்" என்றான்.

அந்த நேரத்தில் அமராவதி தன் தந்தையை நோக்கி, "அப்பா! பொதுவாக இரண்டாவது திருமணம் வழக்கத்தில் இருப்பதை யாவரும் அறிவர். என்னை அவருடனே இணைத்து விடுங்கள்" என்று கூறினாள்.

அப்போது அரசன் தன் மகளை நோக்கி "நீ நாடாளும் அரசனின் மகள் என்பதை மறந்து பேசுகிறாய்" என்றான்.

இந்த நிலையில் அம்பிகாபதி அரசனை நோக்கி, "அரசே, நீங்கள் நாடாளும் மன்னன்! நான் கவிபாடும் மன்னன்!" என்றான்.

அரசன் அம்பிகாபதிக்கு இட்ட கட்டளை

உடனே அரசன் அவனை நோக்கி, "அப்படியானால் உன் எண்ணம் நிறைவேற வேண்டுமென்றால், நீ நூறு பாடல்கள் பாட வேண்டும். அப்பாடல்கள் அனைத்தும் சிற்றின்பம் கலவாத பேரின்பத்தைப் பற்றியதாக இருக்கவேண்டும். ஒரு பாடலிலும் சிற்றின்பம் கலக்கக் கூடாது. கலந்து பாடினால் என்னுடைய வாளுக்கு உடனே நீ இரையாகி விடுவாய்" என்று கோபத்துடன் கூறினான். அம்பிகாபதி உடனே இசைந்து சரி என்றான்.

கம்பரும் அம்பிகாபதியும்

தன் மகனுக்கு ஏற்பட்ட இக்கட்டான நிலையைக் கண்ட கம்பர் யாதும் செய்ய முடியாத நிலையில் மகனைப் பார்த்து,

> "இந்நாளில் இது விளையுமென்றே எழுத்துத்தானிருக்க
> என்னாலே ஆவது ஒன்று மில்லையே – உன்னாலே
> வந்தது தானப்பா? மகனே தவிப்பவரார்
> முந்தை நீ செய்த வினை" – கம்பர் தனிப்பாடல்

என்று பாடினார். அதைக் கேட்ட அம்பிகாபதி தன்னுடைய தந்தையை நோக்கி வருந்தும் வகையில்

> "இன்னாளிது விளையுமென்று எழுத்துத்தானிருக்க
> என்னாலே யாவதொன்று மில்லையே – என்னாலே
> வந்தது தானையாவரும் விதியையார் தடுப்பார்
> எந்தை மகாதேவர் செயல்"

என்று மகாதேவ மாதவனால் வரும் விதியை யாரும் தடுக்க முடியாது என்று அம்பிகாபதி கூறினான்.

அம்பிகாபதி பாட ஆரம்பித்தலும் நிகழ்ந்த நிகழ்ச்சியும்

இந்நிலையில் அரச சபை முன் அம்பிகாபதி 100 பேரின்பப் பயன்பாடல் பாடுவதற்காக நிறுத்தப் பட்டான்.

இதே நேரத்தில் மாடத்தில் அரசன் மகள் அமராவதி தன் காதலன் வெற்றி பெறும் வகையில் ஒரு தட்டில் 100 மலர்களை வைத்து ஒவ்வொரு பாட்டிற்கும் ஒரு மலராக எடுத்துக் கீழே போடத் தயாரானாள்.

கவிபாடல் மரபின்படி முதலில் பாடும் காப்புப் பாடலை எண்ணிக்கையில் சேர்க்கக்கூடாது. இதை யறியாத நிலையில் அமராவதி காப்புப் பாடலையும் ஒரு பாடலாகக் கருதி ஒரு மலரை எடுத்துப் போட்டாள்.

அம்பிகாபதி சிற்றின்பம் கலவாத பேரின்பம் பயக்கும் பாடல்களைப் பாடிக்கொண்டே வந்தான். இந்நிலையில் தட்டிலுள்ள 100 மலர்களையும் கீழே போட்ட நிலையில் அமராவதி மாடத்தில் எழுந்து நின்று மகிழ்ச்சியுடன் அம்பிகாபதியைப் பார்த்தாள். அம்பிகாபதியும் தான் 100 பாடல்களைப் பாடி விட்டோம் என்று மகிழ்ந்து, அடுத்துக் கணீர் என்று குரலெடுத்துச் சிற்றின்பமாக அமராவதியை எண்ணிக் கீழ்க்கண்ட பாடலைப் பாடினான்.

"சற்றே பெருத்ததனமே குலுங்கத் தரளவடம்
துற்றே அசையக்குழை யூசலாடத் துவர்கொள் செவ்வாய்
நற்றேன் ஒழுக நடன சிங்கார நடையழகின்
பொற்றோர் இருக்கத் தலையங்காரம் புறப்பட்டதே"

– அம்பிகாபதி தனிப்பாடல்

என்று அம்பிகாபதி பாட (அமராவதியும், அம்பிகாபதியும் மகிழ்ந்தாலும்) அதைக் கேட்ட புலவர் சபை திடுக்கிட்டது.

அப்போது ஒரு புலவர் எழுந்து, "சபையோர்களே அம்பிகாபதி தான் பாடிய தொண்ணூற்று ஒன்பது பாடலிலேயே சிற்றின்பப்பாடலைப் பாடிவிட்டார். அது குற்றமே" என்றார்.

அம்பிகாபதியும் பதைத்த நிலையிலே தன் குற்றத்தை உணர்ந்து ஓடோடி வந்து தன் தந்தையின் காலில் விழுந்து "அப்பா என்னை மன்னித்து விடுங்கள். நானே தோற்றுவிட்டேன். நான் தண்டிப்பதற்கு உரியவனே" என்று கூறிக் கலங்கினான்.

தன் காலில் விழுந்து கதறும் மகனைத் தூக்கியவாறு கம்பர் துக்கித்து.

"இந்நாளில் இது விளையுமென்றே எழுத்துத் தானிருக்க
என்னாலே ஆவது ஒன்றும் இல்லையே –உன்னால்
வந்தது தானப்பா? மகனே தவிப்பவர் யார்?
முந்தை நீ செய்த வினை" – கம்பர் தனிப்பாடல்

என்று பாடிய படியே, சோகத்தால் தன் மகனைப் பிடித்துக் கண்ணீர் விட்டழுதார்.

அப்போது ஆதித்தன் "யாரங்கே, என் ஆணையை மீறிய அம்பிகாபதியைக் கொண்டு சென்று தலையை வெட்டிவீசுங்கள்" என்று கூறினான். உடனே காவலர்கள் அம்பிகாபதிக்கு விலங்கு பூட்டி இழுத்துச் சென்றனர்.

சில நூல்களில் ஆதித்த சோழனே, தன் கை வாளினால் சபையில் அம்பிகாபதியின் தலையை

வெட்டினார் என்று கூறப்படுகிறது. எப்படியும் தவிர்க்க முடியாத நிலையில் அம்பிகாபதி வாளால் வெட்டப்பட்டே பரம்பதமடைந்தான் என்பதை அனைவரும் அறிந்து சோகமடைந்தனர்.

தன் மகன் சேதிக்கப்பட்ட நிலையை அறிந்த கம்பர் துயரம் தாங்கமாட்டாமல்,

“மட்டுப்படா கொங்கைமானார் கலவி மயக்கத்திலே
கட்டுப் பட்டாயடா! என்ன காதல் பெற்றாய் மதன்கை அம்பினாலே
பட்டுப் பட்டாயினுந் தேறுவையே என்று பார்த்திருந்தேன்,
வெட்டுப்பட்டாய் மகனே! தலைநாளின் விதிப்படியே”

– கம்பர் தனிப்பாடல்

அமராவதியின் தற்கொலை

தன் காதலன் அம்பிகாபதிக்கு நேர்ந்த இறப்பு நிலையைக் கண்டதும் அமராவதி தன் தாய் இளங்கோ பிச்சியை நோக்கி, ‘அம்மா’ கணவனுக்கு நிகரானவனை இழந்த என்னை அருள் வழங்கும் வெக்காளியம்மன் கைவிட மாட்டாள். தயவு செய்து என்னுடன் கோவிலுக்கு வாருங்கள். அவளிடம் இறைஞ்சி வேண்டுவோம்,” என்று மன்றாடிக் கேட்டாள்.

தன் மகளின் எல்லையற்ற வருத்த நிலையை அறிந்து மகாராணி இளங்கோபிச்சி, உடனே கோவிலுக்குச் செல்ல ஏற்பாடு செய்தாள். குதிரை வண்டி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. வழியில் அமராவதி வண்டி ஓட்டுபவனை நிறுத்தச் செய்து, அதிலிருந்து இறங்கி பக்கத்திலிருந்த கொதிக்கும் சுண்ணாம்புக் காளவாயில்

குதித்து சுண்ணாம்புடன் ஐக்கியமாயினாள். தன் காதலன் சென்ற விண்ணுலகைத் தானும் சென்றடைந் தாள் அமராவதி. தன் மகள் உயிரை விட்ட நிலையைக் கண்ட இளங்கோ பிச்சி மயங்கி விழுந்தாள்.

அமராவதியின் தற்கொலையையும் அம்பிகாபதி யின் தலை துண்டிக்கப்பட்ட செய்தியையும் அறிந்த மக்கள் சோகத்தில் மூழ்கினர்.

காஞ்சியிலுள்ள அம்பிக்கு அருகில் இன்று பெயர் பெற்று விளங்கும் அமராவதிப் பட்டணம் தான் அமராவதி பிறந்த ஊர் என்பதை அறிகிறோம்.

அம்பிகாபதியைப் பெற்ற தாயாகிய நிகர்த்தவல்லி, தன் மகன் இறந்த நிலையையும், அதனால் கணவர்படும் வேதனையையும் கண்ட நிலையில் மயங்கி விழுந்தாள். மயங்கி விழுந்த நிலையில் உயிரும் அவளை விட்டுப் பிரிந்தது.

தனக்குத் துயரேற்பட்ட பொழுதெல்லாம் ஆறுதல் கூறி அன்பு மொழிகளால் இனிய கரும்பு போல் இனிக்கக் கூறிய தன் மனைவி நிகர்த்த வல்லி திடீரென மயங்கி விழுந்து உயிர்விட்ட நிலையைக் கண்ட கம்பர் எல்லையற்ற சோகமடைந்தார். அவளை அணைத்த இக்கைகள் துடிக்க விட்டு அமரம் சென்றதைக் கீழ்க் கண்ட கவியால் பாடி அயர்ந்து கம்பர் தன் தலையைப் பற்றியவாறு அமர்ந்து கண்ணீர் விட்டார்.

“சொல்லியைச் சொல்லினும் அமுதான சொல்லியைச் சொற்கரும்பு
வல்லிமை மேகவிடாய் தவிர்ப்பாளை விழியன்பினால்

கொல்லியைக் கொல்லியம் பாவை ஒப்பாளை குளிர்ஒற்றியூர்
வல்லியைப் புல்லிய கைக்கோ இவள்வந்து வாய்த்ததுவோ?"

என்று கதறினார் கம்பர்.

அம்பிகாபதியின் காதல் வாழ்க்கை ஒரு காதல் காவியமாகும். உலக இலக்கிய ஏடுகளில் பொன்றாப் புகழ் பெற்ற 'லைலா—மஜ்னு', 'ரோமியோ —ஜூலியட்', 'அனார்கலி — சலீம்' ஆகியோருக்கு இல்லாப் பெருஞ் சிறப்பு அம்பிகாபதிக்கும் அமராவதிக்கும் உண்டு. அவர்களெல்லாம் உலகம் போற்றும் காதலராவர்.

ஆனால் தமிழாளும் பாவலன் அம்பிகாபதி, நாடாளும் மன்னன் மகளை, அமராவதியைத் தன் கவித்திறனுக்குத் திறையாகப் பெற்றான். இருவரும் காதலுக்காக வாழ்ந்தனர். காதலன் அம்பிகாபதி கொலையுண்டு ஆவி துறந்தர்ன். கொதிக்கும் சுண்ணாம்புக் காளவாயில் குதித்து அமராவதி ஆவி நீக்கினாள். இருவர்தம் காதலுக்கு அழிவேது? ஈடேது? எதுவுமில்லை.

காஞ்சிபுரத்தில் கீழ் அம்பியில் கம்பருக்கு ஒரு மாளிகை அரசருடைய மேற்பார்வையில் கட்டப் பட்டது. அதில்தான் கம்பர் தனது மனைவி நிகர்த்த வல்லியுடன் குடும்பம் நடத்தினார்.

மேலும் அம்பியில் கம்பர் ஒரு கல்விச்சாலை நடத்தி வந்தார். அங்குதான் கம்பருடைய மகன் அம்பிகாபதி, மகள் காவேரி, ஆதித்த சோழனுக்கும் வீரமாதேவிக்கும் பிறந்த பராந்தகன், ஆதித்தசோழனுக்கும் இரண்டாம் மனைவி இளங்கோபிச்சிக்கும் பிறந்த அமராவதியும்

கன்னரத்தேவனும் மற்றும் வேறு அரசகுமாரர்களும் கம்பருடைய கல்விச் சாலையில் பயின்று வந்தனர். காஞ்சிபுரத்தில் 20 ஆண்டுகள் கம்பர் வாழ்ந்து வந்தார். அங்குள்ள அம்பிகாபதீச்சுவரர் ஆலயத்தில் ஆண்டுதோறும்நவராத்திரிவிழாசிறப்பாகநடைபெற்றது, நடைபெற்றுக் கொண்டு வருகிறது. அவ்விழாவில் கம்பர் தம்மிடம் பயின்ற மாணவ மாணவிகளைக் கொண்டு விழா நிகழ்ச்சிகளை நடத்துவதுண்டு. கம்பர் மகள் காவேரி, ஆதித்த சோழன் மகள் அமராவதி இருவருமே சிறப்பாக விழா நிகழ்ச்சியில் ஆடல் பாடல்களை நடத்தி வந்தனர்.

காவேரியின் ஆடல் பாடல்களில் மனதைப் பறி கொடுத்தவன் கன்னரத்தேவன். சோழ அரசனின் மகனான கன்னரத்தேவன் காவேரியை விரும்பினான். காவேரி பருவம் அடைந்த நிலையில், கம்பர் அம்பியில் உள்ள அம்பிகாபதீச்சுவரர் ஆலயத்தில் நடைபெற்ற நவராத்திரி விழாவைச் சிறப்பாக நடத்திக் கொண்டிருந்தார். அவ்விழாவில் கலந்து கொண்ட கன்னரத்தேவன், காவேரியைத் தனித்த நிலையில் அவளிடம் தான் விரும்புவதாகக்கூறினான். அப்பாவைக் கலந்து பேசும்படி காவேரி கூறினாள்.

அம்பிகாபதி அரசனால் வெட்டி வீழ்த்தப்பட்ட பின்னர், அமராவதியும் சுண்ணாம்புக்காளவாயில் விழுந்து உயிர்நீத்தாள். தன் மகன் அம்பிகாபதி இறந்த நிலையைக் கேட்ட தாய் நிகர்த்தவல்லி மயங்கிக் கீழே விழுந்து உயிர்விட்ட நிலையில் கம்பர் பெரிதும் வருந்தினார். ஊரே திரண்டுவந்து கண்ணீர் சொரிந்து

நின்றனர். ஊரே துக்கித்த நிலையில் ஈமக்கிரியையைக் கம்பர் சோகத்துடன் செய்து நிறைவேற்றினார்.

அப்போது உடனிருந்து துக்கித்தவர்களில் கம்பரின் மருமகள் அருண்மொழியும், அவளுடைய மகன் தண்டியும் ஆவார்கள். கைம்பெண்ணான அருண்மொழியும் ஆறுதல் கூற முடியாத நிலையில் தன் மகன் தண்டியோடு தாய் வீடு அடைந்தாள். தேரழுந்தூர் அரண்மனை போன்ற தமது மாளிகையில் காவேரியும், கம்பரும் துயரநிலையில் வாழ்ந்தனர்.

கம்பர் மகள் காவேரியின் தற்கொலை

ஒருநாள் கம்பர் வெளியில் சென்றபோது கன்னரத்தேவன் கம்பருடைய மாளிகைக்கு வந்தான். காவேரி தனித்த நிலையில் வீட்டைப் பெருக்கிக் கொண்டிருந்தாள். அப்போது அங்கு வந்தான் கன்னரத்தேவன்.

காவேரி கன்னரத்தேவன் வந்ததை அறிந்து, "அப்பா சிறிது நேரத்தில் வந்து விடுவார்" அங்கே ஆசனத்தில் அமரும்படி ஆசனத்தைக் காட்டினாள். அமர்ந்தான் கன்னரத்தேவன். "ஏதேனும் சாப்பிடுகிறீர்களா?" என்று காவேரி கேட்டாள்.

அப்போது காவேரியிடம் "உன்னை நான் அடையத்தான் வந்திருக்கிறேன். பக்கத்தில் வந்து அமருவாயாக" என்றான்.

"அப்பா கோயிலுக்கு போயிருக்கிறார்" கொஞ்ச நேரம் கழித்து வாருங்கள் என்று காவேரி கோபத்துடன் கூறினாள்.

"காவேரி, இப்பொழுது அப்பா வெளியில் சென்றுள்ளார், என்று அறிந்தே வந்தேன்" என்று கூறி அவளை நெருங்கினான் கன்னரத்தேவன். உடனே காவேரி மாளிகையை விட்டு வெளியே செல்ல விரைந்தாள். அப்போது கன்னரத்தேவன் அவள்முன் சென்று, "காவேரி நான் உனக்காகவே உறையூரிலிருந்து இங்கு வந்திருக்கிறேன். என்னை ஏமாற்றாதே!" என்று கூறி, கட்டியணைக்க முயன்றான். காவேரி குனிந்து ஓடி பக்கத்து அறைக்குள் சென்று, கதவை மூடித் தாழ்ப்பாள் போட முனைந்தாள். அப்போது கன்னரத்தேவன் ஓடிவந்து, அவள் கதவைத் தாளிட முடியாதவாறு தடுத்து, உள்ளே நுழைந்து அவளைப் பற்ற எண்ணினான்.

இந்நிலையில் காவேரி கற்பைக் காக்க ஓடினாள். அடுத்த அறையில் பெரிய அறையில் பன்னிரண்டு கலம் கம்பு கொண்ட மிகப் பெரிய கம்பங்குதிர் இருந்தது. அந்தப் பெரிய கம்பங்குதிரில் மேலே சாணம் மெழுகிய மூங்கில் தட்டியாலான மூடியிருந்தது. ஒரு ஏணி அக்குதிரில் சாத்தி வைக்கப்பட்டிருந்தது. வேகமாக ஏணியில் காவேரி ஏறி, கம்பங்குதிரை மூடியிருந்த தட்டி மூடியை விலக்கி விட்டு, அப்படியே குதிருக்குள் குதித்தாள். காவேரி குதித்ததால் உள்ளே (நீரில் மூழ்குவது போல்) இருந்த கம்புகள் மேலே வந்து சிதற, உள்ளே அமிழ்ந்து விட்டாள் காவேரி.

இதே சமயம் வேகமாக உள்ளே வந்த கன்னரத் தேவன் ஏணி மீதேறி, குதிரின் மேல் மூடியைத் திறந்து உள்ளே கம்புக்குவியலில் காலை வைக்க,

அப்படியே உள்ளே மூழ்கும் நிலையில் மேல்மூடியை இருகரங்களாலும் பிடித்து மேலே தத்தளித்த நிலையில் அவன் மேலேறினான்.

இதேநிலையில் "காவேரி, காவேரி" என்று குரல் கொடுத்தவாறு கம்பர் அங்கே வந்தார். அதைக் கண்ட கன்னரத்தேவன் வேகமாக ஏணிப்படியிலிருந்து இறங்கி வந்து அறையை விட்டு ஓடி, கம்பரையும் கடந்து சென்று மாளிகையை விட்டு வெளியேறி ஓடினான்.

"கன்னரத்தேவா, நில்" என்ற கதறியவாறு கம்பர் அவனைப் பின் தொடர்ந்தார். கன்னரத்தேவன் திரும்பிப் பாராமல் வேகமாக வெளியில் வந்து, அங்கு நின்ற குதிரை மீதேறினான். ஏற்கனவே கன்னரத் தேவனுக்காகக் குதிரை மீதேறிக் காத்துக் கொண்டிருந்த இரு வீரர்களுடன் கன்னரத்தேவன் குதிரையில் ஏறியவுடன், மூவரும் சென்றுவிட்டார்கள்.

வீட்டிற்குள் நுழைந்து பதற்றத்துடன் விரைந்த கம்பர் ஏணி மீதேறிப் பார்க்க, குதிரினுள் தன் மகள் காவேரியின் தலைமுடி மட்டும் தெரியக் கண்டு அதிர்ச்சியுற்றார். இதற்குள் கம்பரைத் தேடி மாளிகையின் உள்ளே வந்த மக்கள் பலரும், கம்பங் குதிரினுள்ளிருந்த காவேரியை மீட்டனர். அவர்கள் காவேரியின் இறந்த உடலைத் தான் மீட்க முடிந்தது.

காவேரியின் இறந்த உடலைக் கண்டு மக்கள் கதறுவதை கேட்டு, ஊரே திரண்டு மாளிகையின் உள்ளே வந்து ஆறாத் துயரில் ஆழ்ந்தனர்.

அன்று ஆடி மாதம் மூன்றாவது வெள்ளிக்கிழமை, கன்னி கழியாப் பெண் பூவாடைக்காரி, ஆகி ஊர்

திரளச் சுடலை அடைந்து தீ வைக்க நீர்த்துப் போனது காவேரியின் உடல். அன்று முதல் ஆண்டுதோறும் ஆடி மாதம் மூன்றாம் வெள்ளிக்கிழமை காவேரியைக் குல தெய்வமாகத் தமிழகமே கொண்டாடி வருவதை அறிகிறோம்.

தன் மகள் காவேரியைச் சுடலையில் தகனம் செய்த நிலையில் கம்பர், புரவி பூட்டிய வண்டியில் ஏறி, துயரத்தோடு ஆதித்த சோழன் அரண்மனையை அடைந்து, வண்டியை விட்டிறங்கி அரண்மனைக்குள் புகுந்தார். எதிரே ஆதித்த சோழனும் வந்தான்.

“அரசே! இன்று காலை உமது மகன் கன்னரத் தேவன் என்னுடைய மாளிகைக்குள் வந்து தனித்திருந்த என் மகள் காவேரியிடம் தவறாக நடக்க முற்பட்டான். காவேரி கம்புக்குதிரில் இறங்கி உயிரை மாய்த்துக் கொண்டாள்.”

கம்பர் தெரிவித்தார்.

“கன்னரத்தேவன் எங்கிருந்தாலும் உடனே கைது செய்து அழைத்து வாருங்கள்” என்று இரண்டு படை வீரர்களுக்குக் கட்டளையிட்டான் அரசன். படைவீரர்கள் விரைந்து குதிரையில் ஏறிச் சென்றனர்.

அரசன் கட்டளைப்படி கன்னரத்தேவனைப் படைவீரர்கள் தேடிச் சென்றனர். ஆனால் அவர்கள் அரசனிடம் கொண்டு வந்த செய்தி அதிர்ச்சியை ஊட்டியது. கன்னரத்தேவன் தேரழுந்தூரை விட்டே குதிரையில் ஓடிவிட்டதோடு மட்டுமல்ல! அவன் தன் பாதுகாப்பை வேண்டி சொந்த இடமான இராஷ்டிர

கூடத்துப் பாட்டனார் வீட்டிற்குச் சென்று தஞ்சமாகி விட்டான். அவனைத் தேடிப் பயனில்லை என்ற செய்தியை அதிகாரிகள் கூற அதை அறிந்த ஆதித்தனும் அதிர்ச்சியடைந்தான்.

காவேரியின் தற்கொலைக்குக் காரணமான கன்னரத்தேவன் படைவலிமை மிக்கவனாக இருந்தாலும், பின்னால் தன் ஆளுகையை இழந்து விட்டான். ஆதித்த சோழன் பின்னால் இறந்தபோது அவர் மகன் பராந்தக சோழன் பட்டத்திற்கு வந்த நேரத்தில் பராந்தகனை எதிர்த்து ஆட்சியைக் கைப்பற்ற கன்னரத்தேவன் முயற்சிசெய்தும், முடியாத நிலையில் ஒடுங்கக் காணுகின்றோம். பராந்தகனே அவனை அடக்கி ஒடுக்கி விட்டான்.

மேலும் காவேரி இறப்பதற்குக் காரணமாக இருந்தவன் ஒட்டக்கூத்தனுடைய மாணவனான விக்கிரம சோழன் ஆவான் என்று (கி.பி. 1135 — 1150) அம்பிகாபதி இயற்றிய நாடக நூல் கூறுகிறது. அந்த நாடகநூல் கற்பனை நாடகநூல். அது அம்பிகாபதியால் எழுதப்படவில்லை என்று மற்றுமொரு சாரர் எதிர்க்கின்றனர்.

ஏற்கனவே தந்தையாகிய ஆதித்தரையும், தாயாகிய திலகவதியையும் இழந்த கம்பர், தன் மகன் அம்பிகாபதி வாளால் வெட்டப்பட்டான் என்ற செய்தியால் அதிர்ச்சியுற்றார். பின் தன் மகன் பிரிவைக் கேட்டு நிகர்த்தவல்லியும் இறந்தாள் என்ற செய்தியைக் கேட்டு பேரதிர்ச்சியுற்றார் கம்பர். இப்பொழுது மகள் காவேரியும் தற்கொலை புரிந்து கொண்டாள் என்ற செய்தியால் உந்தப்பட்ட கம்பர் பணிந்த நிலையில்

பொறுமையுடனும், அமைதியுடனும் ஆதித்த சோழனிடம் சென்று நீதி கேட்டார்.

கம்பர் கேட்ட நீதியும், நடந்த நிகழ்ச்சியும்

அப்பொழுது ஆதித்தசோழன் கம்பரை நோக்கி, "தாங்கள் தமிழ்க் காவியம் படைத்த சிறப்பினால் தான், உங்களைக் காப்பாற்றி வந்தேன். இல்லையென்றால் அன்றே உம்மை நாடு கடத்தியிருப்பேன். மேலும் என்னுடைய சினத்தைத் தூண்டாதீர்கள். இங்கிருந்து சென்று விடுங்கள்" என்று ஆதித்தன் கோபத்துடன் கூறினான்.

அரசனின் அர்த்தமற்ற கூற்றைக் கேட்ட கம்பர் சினம் பொங்கி, அரசன் முன் சென்றார். உதடுகள் துடித்தன. சொற்றொடர்கள் வெடித்தன. உணர்ச்சி பொங்க அரசனை நோக்கி,

"மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?
உன்னையறிந்தோ தமிழை ஓதினேன்? – என்னை
விரைந்து ஏற்றுக் கொள்ளாத வேந்துண்டோ? உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?" – கம்பர் தனிப்பாடல்

மேற்கண்ட பாடலில் "குரங்குப் புத்தியுடையவன் அரசன். குரங்கு கையிலகப்பட்ட மாலையை அது பிய்த்து எறிவது போல, தன்னுடைய புலமையை இழித்துக் கூறிவட்டான் அரசன். குரங்குக்கு இருப்பிடம் ஒரு மரக்கொம்பு மட்டும் அல்லாமல் நினைத்த மரக் கொம்புகளுக்கெல்லாம் தாவிச் செல்லும். அதுபோல் புலவனுடைய புலமையை எல்லா நாட்டு அரசர்களும் ஏற்று வரவேற்பார்கள்.

இப்பாடலில் குரங்கின் இழிந்த புத்தியை உடையவன் அரசன் என்றும், எந்தக் கிளைக்குச் சென்றாலும் குரங்குக்கு மதிப்புண்டு என்று புலவர்தம் கீர்த்தி பெருமையுடையது என்றும் கம்பர் சொல்நயத்துடன் மேற்கண்ட பாடலைப் பாடியுள்ளார். கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்புண்டு என்று வலியுறுத்திக் கூறியுள்ள திறம் போற்றுதற்குரியதாகும்.

மேற்கண்ட பாடலைக் கம்பர் பாடியதோடு, ஆதித்த சோழனது ஆளுகை குறுகிய நிலப்பரப்பு உடையது தான். அதைப் பெரிதென்று கருதி மமதை கொள்ளக்கூடாது அரசன் என்பதைச் சுட்டிக் காட்டும் வகையில் கீழ்க்கண்ட மற்றொரு பாடலையும் கம்பர் பாடக் கேட்கிறோம். கம்பர் அரசனை நோக்கி.

"காதம் இருபத்துநான்கு ஒழியக் காசினியை
ஓதக் கடல்கொண்டு ஒளித்ததோ?–மேதினியில்
கொல்லிமலைத்தேன் சொரியும் கொற்றவா? நீ முனிந்தால்
இல்லையோ எங்கட்கு இடம்."

– கம்பர் தனிப்பாடல்

பாடல் கருத்து:

கம்பர் ஆதித்தனைப் பார்த்து, "மன்னா, உன் சோழ நாடு இருபத்து நான்கு காதம் தான் (240 சதுரமைல்கள்) நீ கோபித்தால் எனக்கு வேறு இடம் இல்லையா? பரந்து பட்ட பிற நாட்டை எல்லாம் கடல் கொண்டு விட்டதா? (இல்லையே) கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பதை அறிவாயாக" என்று கம்பர் நகைத்துக் கூறினார்.

கம்பர் கூறியதைக் கேட்ட ஆதித்தன் மிக்க சினம் கொண்டான். "கம்பரே, என்னை மதியாத நீர் எம் நாட்டை விட்டு உடனே செல்வாயாக! உம்மை மதிக்கும் வேந்தரிடமே செல்வாயாக! போ!" என்று கூறி, கோபத்தோடு ஆதித்தன் கம்பரைப் பார்த்தான்.

கம்பரும் கோபத்தோடு, "அரசே, நான் இயற்றிய தமிழ்ச் சுவடிகளோடும் வணங்கும் கலைவாணியோடும் இப்பொழுதே புறப்படுகிறேன். என்று கூறி அரண்மனையை விட்டகன்றார் கம்பர். அங்கிருந்து புறப்பட்ட கம்பர் தேரழுந்தார் வந்தார். தன் மாளிகையினுள் புகுந்தார்.

கம்பர் சோழ நாட்டை விட்டுப் புறப்படுதல்

ஐந்து முழுத்துணியின் ஒரு முனையில் தான் வணங்கும் கலைவாணியின் சிலையை முடிந்தார். மறுமுனையில் தாம் எழுதிய இராமாயணச் சுவடி களையும் முடிந்தார். கம்பர் புறப்படும் செய்தியை அறிந்த மக்கள் துயரத்துடன் கம்பர் மாளிகையில் வந்து கூடினர். கம்பர் தனக்குக் கிடைத்த பரிசுப் பொருள்கள், சால்வைகள், இரத்தினாபரணங்கள் அனைத்தையும் வந்தவர் ஒவ்வொருவருக்கும் ஒன்றாகக் கொடுத்தார். மற்றும் மாளிகையிலுள்ள ஒவ்வொரு பொருளையும் வந்தவர்க்கெல்லாம் வாரி வழங்கினார். அப்பொழுது தம் மாளிகையை மேற்பார்வையிட்டுக் கட்டிக்கொடுத்த நாட்டாமை நல்லமுத்துவும் அவர் மனைவியும் கண்ணீர் விட்டு தேம்பி அழுதனர். கம்பர் அவர்களைத் தேற்றி, "என்னுடைய மாளிகையை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்", என்று அனைவர் முன்னிலையிலும் கூறி அகன்றார்.

வீதிகளெங்கும் மக்கள் இருபுறமும் சோகத்தோடு நிற்க, அவர்களை வணங்கிய நிலையில் இராமாயணச் சுவடிகளையும், கலைவாணியையும் முடித்த ஐந்து முழத் துண்டோடு புறப்பட்டு, தான் அனுதினமும் பூஜை செய்து வழிபடும் விநாயகர் ஆலயம் சென்று சேவித்து, பின் தனக்கு வரமளித்த காளிகோவிலுக்கு சென்று வணங்கிப் பின் அங்குள்ள ஆமருவியப்பன் ஆலயம் சென்று வணங்கித் தேரழுந்தூர் விட்டகன்றார். அனைவருக்கும் ஆறுதல் கூறிய நிலையில் நடந்தே சோழ நாட்டு எல்லையைக் கடந்தார்.

### பாண்டிய நாடு வருதல்

பாண்டிய நாட்டில் ஓர் சத்திரத்தில் தங்கினார், யாரென்று அறியாத நிலையில் சத்திரத்தில் உணவுண்டு தங்கி, மதுரையை நோக்கி வந்தார்.

வைகையில் நீராடி, தான் கொண்டு வந்த கலைவாணிக்குப் பூஜை செய்து, மதுரை மீனாட்சி யம்மன் ஆலயம் சென்று அம்மையப்பரை வணங்கி அங்கு ஓய்வெடுத்தார்.

பின் மதுரையிலிருந்து புறப்பட்டு நடந்தே பயண மாகி கன்னியாகுமரி நோக்கி வந்தார். கம்பருக்கு பசி காதையடைத்த நிலையில் சாலையின் பக்கத்திலுள்ள ஒரு மரத்தடியில் வந்து படுத்தார். அப்போது நிலத்தை உழுது கொண்டிருந்த ஓர் உழவன் யாரென்று அறியாத நிலையில் கம்பருக்கு கலயத்தின் கஞ்சியைக் கொடுத்து குடிக்கச் செய்தான். கம்பர் குடித்துப் பருகிய நிலையில் உழவனுடைய பெருந்தன்மையை உரத்துப் பாடினார்.

"மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்கும் கை
ஆழி தரித்தே அருளுங்கை சூழ்வினையை நீக்குங்கை
என்றும் நிலைக்குங்கை நீடுழி காக்குங்கை
காராளர் கை" –(கம்பர் தனிப்பாடல்)

என்று வாழ்த்திவிட்டுப் புறப்பட்டார்.

இப்பாடலை ஓலையில் பதிவு செய்த நிலையில புறப்பட்டார் கம்பர்.

கம்பர் சேரநாட்டை அடைந்து தொண்டு செய்தல்

கி.பி. 888 இல் தென்குமரி வந்தடைந்தார். இந்த நிலையில் சோழ நாட்டிலிருந்து வந்த ஒரு புலவர் சாலையில் படுத்திருக்கிறார் என்பதை அறிந்த, சேர நாட்டு மன்னன் தாணுரவி தான் தங்கியிருந்த பத்ம நாமபுரம் கோட்டையிலிருந்து தேரில் வந்து, கம்பரை வணங்கி, பட்டாடை உடுத்தச் செய்து, தேரிலேற்றிக் கோட்டைக்கு அழைத்து வந்தார்.

தன் அவையில் கவிச் சக்கரவர்த்திக்குரிய பரிவாரங்களை கம்பருக்கு வழங்கி சிறப்புச் செய்தார். அப்பொழுது சோழன் சபையிலிருந்து வெளியே அங்குவந்த நிகழ்ச்சிகளை எல்லாம் அரசனிடம் கூறி கம்பர் நினைவு எண்ணங்களை எல்லாம் வெளிப் படுத்தினார். தாணுரவியின் பத்மநாபபுரம் கோட்டை யில், கம்பர் அரசவைப் புலவராகி சிறப்புப் பெற்றார். வேணாட்டின் தலைநகர்தான் மதில் சூழ்ந்த பத்மநாபபுரம் கோட்டையாகும். அன்றைய நாஞ் சில் நாடும், வேணாடும் தான் இன்றைய குமரி மாவட்டமாகும்.

சேர நாடு முழுவதும் கம்பர் வருகையைப் பறை சாற்றி, பத்மநாபபுரத்தில் கம்பரது இராமாயணத் தொடர் சொற்பொழிவுக்கு, அரசன் ஏற்பாடு செய்தான். தாணுரவி ஆதித்த சோழனுடைய சம்பந்தி என்பதை நாமறிவோம். தாணுரவி தன்னுடைய இளைய மகளை ஆதித்த சோழனின் மகன் பராந்தகனுக்கு மனைவியாகச் செய்து சிறப்புப் பெற்றவன்.

ஆதித்த சோழனுக்கு தாணுரவி படைபலமும் கொடுத்துச் சிறப்பித்திருந்தான். முற்காலத்தில் சேர மன்னன் தாணுரவியுடன் நல்லுறவு கொண்டு 'கோதண்ட ராமன்' என்ற விருதையும் பெற்றவன் ஆதித்த சோழன். ஆதித்த சோழனை வெறுத்து வந்த கம்பர் இப்பொழுது பத்மநாபபுரத்தில் செல்வாக்குடன் வாழ்வதை அறிந்த ஆதித்த சோழன் வெகுண்டான். எனினும் தாணுரவிக்குத் தான் உறவாக இருப்பதால் கம்பரிடமும் கருணை காட்ட வேண்டிய நிலை ஏற்பட்டது.

ஆதித்த சோழன் இப்பொழுது தன் மகன் பராந் தகனை பத்மநாபபுரத்திற்கு அனுப்பிக் கம்பரிடம் மன்னிப்பு வேண்டி, உடனே சோழ நாட்டுக்குத் திரும்புமாறு செய்தி அனுப்பினான். அதேபோல் பராந்தகன் உடனே சோழ நாட்டிலிருந்து பத்மநாப புரத்திற்குப் பயணமாகிக் கம்பரிடம் வந்து சேர்ந்தான். தாணுரவி அவனை வரவேற்றான். பராந்தகன் தன் தந்தை கூறிய செய்தியைத் தெரிவித்து உடன் கம்பரை சோழ நாட்டிற்கு வரும்படி வேண்டினான். எனினும் கம்பர் தன் சீடனாகிய பராந்தகனிடம்

பின்பு வருவதாகச் சமாதானம் கூறி அனுப்பினார். எனினும் கம்பர் பராந்தக சோழனின் நாட்டிற்குப் பின் சென்றதை நாம் அறிகிறோம். காரணம் என்ன வென்றால் கி.பி. 907ல் ஆதித்த சோழன் காளாஸ்தி என்னுமிடத்தில் உள்ள அரண்மனையில் இயற்கை எய்தினான். பராந்தகன் தன் தந்தையின் பள்ளிப் படையில் கோதண்ட ராமேஸ்வரம் என்னும் ஆலயம் கட்டியதைப் பின்னர் அறிகிறோம்.

கம்பரும் இராமாயணத் தொடர் சொற்பொழிவும்

சேரமன்னன் தாணுரவி தன் சிறப்பு அவைப் புலவர் கம்பரிடம், தங்களின் இராமாயணச் சொற்பொழிவைத் தொடர்ந்து மக்கள் கேட்க ஏற்பாடு செய்துள்ளேன் என்று கூற, கம்பர் மகிழ்ச்சியடைந்தார்.

கம்பராமாயணச் சொற்பொழிவிற்காக மண்டபம் கட்டி அலங்கரித்து மக்கள் அமர்ந்து கேட்க தாணுரவி ஏற்பாடு செய்தார். தினமும் சொற்பொழிவு நடைபெற்றது. இலங்கையிலிருந்து சிலர் அங்கு வந்து இராமர் வரலாற்றைக் கேட்டு மகிழ்ந்தனர். பட்டாபிஷேகப் படலத்தை கம்பர் தொடங்க, பட்டாபி ஷேக மண்டபத்தையும் அரசன் கட்டி அலங்கரித்தான். சீதை சமேத இராமச்சந்திர மூர்த்தியை மேடையில் பிரதிஷ்டை செய்து சொற்பொழிவு விழா நடைபெற்றது. பட்டாபிஷேக நாளன்று சோழ நாட்டிலிருந்து பராந்தக சோழனும் வருகை தந்து சிறப்பித்தான். கம்பருக்கு தக்க கௌரவச் சிறப்பும் செய்யப் பெற்றது.

### இலங்கைப் பயணமும் சொற்பொழிவும்

கம்பரிடம் இலங்கைத் தமிழர் பலர் வருகை தந்து, இலங்கை வந்து சொற்பொழிவு ஆற்ற வேண்டினர். மறுக்கவியலாத கம்பர் இலங்கைப் பயணத்தை ஏற்றார். யாழ்ப்பாணம், காரை நகர், மட்டக் களப்பு, திருக்கோணமலை, கொழும்பு, அனுராதபுரம் முதலான பல பகுதிகளுக்கும் செல்ல அரியதோர் வாய்ப்புப் பெற்றதால் மனம் மகிழ்ந்தார். தான் இயற்றிய இராமாயண இலங்கை நிகழ்ச்சிகளையும், இடங் களையும் கண்முன் கண்டுகளிக்கும் பேருவகை கொண்டார். சீதை தங்கியிருந்த அசோகவனம், ஐந்து வெந்நீர் ஊற்றுகள், திருமுருகன் எழுந்தருளியுள்ள கண்டி, ஆகிய இடங்களுக்கும் சென்று தெய்வ தரிசனம் பெற்றார். ஆங்காங்கே இராமாயண சொற்பொழிவு களும் செய்தார். மக்கள் கம்பரைப் பாராட்டினார்கள்.

இராவணன் கயிலைமலையின் சிறுபகுதியைப் பெயர்த்தெடுத்துக் கொணர்ந்த மலைதான் இலங்கையி லுள்ள திருக்கோண மலையாகும். இராவணன் அரண்மனை அமைப்பிடமும் கடல் சூழ்ந்த இலங்கைக் காட்சிகளையும் கண்டு பெருமிதமடைந்தார் கம்பர்.

### கம்பர் சரஸ்வதி அந்தாதி பாடுதல்

இலங்கையிலிருந்து கம்பர் திரும்பிய நிலையில் சேர நாடு வந்தார். தாணுரவி வரவேற்று உபசரித்தான். கம்பர் தான் உடன் கொண்டுவந்து பூசித்து வருகின்ற ஒரு அடி உயரமுள்ள பிரபையுடன் கூடிய கலைவாணி சிலைக்கு ஒரு நிரந்தர ஆலயம் அமைக்க

வேண்டுமென்றார். அரசர் தாணுரவியிடம் தன் வேண்டுகோளை கூறினார். அரசனும் அதைப் பெரிய பாக்கியமாகக் கொண்டு அரண்மனையில் கற்றளியால் சரஸ்வதி ஆலய திருப்பணியை ஏற்றான். அவன் திருப்பணி செய்யும் ஆலயத்தின் முன்னால் ஆடல் பாடல் நிகழ்ச்சிகள் நடத்த விசாலமான முன் மண்டபம் ஒன்றும் கற்றூண்களைக் கொண்டு திருப்பணி செய்தான். ஆகம விதிப்படி சிவாச்சாரியார்களைக் கொண்டு சரஸ்வதி ஆலயத்தை அரசன் பிரதிஷ்டை செய்தான். பனிநீர், சந்தனம் குழைத்து இரத்தினப் பொடியால் கோலமிடச் செய்தான். வாழை, கமுகு உரிய இடங்களில் நடச் செய்தான், நெய்விளக்கேற்றி, வாத்தியம் பல இசைக்க கம்பரே சரஸ்வதி பூஜை செய்து, சரஸ்வதி அந்தாதி என்ற 30 பாடல்கள் கொண்ட அரிய நூலை இயற்றினார்.

சரஸ்வதி அந்தாதி

காப்பு:

ஆய கலைகள் அறுபத்து நான் கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை – தூய
உருப்பளிங்கு போல் வாள் என்னுள்ளத் தினுள்ளே
இருப்பள் இங்கு வாரா திடர். (1)

படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடிக மழ்பூந் தாமரைபோல் கையும் – துடியிடை
அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும் சொல்லாதோ கவி (2)

முதல் பாடல்

சீர்தந்த வெள்ளிதழ்ப் பூங்கமலாசனத் தேவி செஞ்சொல்
ஆர்தந்த வெண்மனத் தாமரையாட்டி சரோருகமேற்
பார் தந்த நாதவிசை தந்த வாரணப் பங்கயத்தாள்
வார்தந்த சோதியம் பேருகத்தாளை வணங்குதுமே.

மேற்கண்டவாறு 30 கட்டளைக் கலித்துறையால் அமைத்த ஆதியை அந்தமாகக் கொண்ட அந்தாதிப் பாடல்கள் பாடிக் கம்பர் அரங்கேற்றம் செய்து சிறப்பித்தார்.

தொடர்ந்து ஆடல் அழகிகளைக் கொண்டு தெய்வீக நடனங்கள் ஆடச் செய்து கம்பர் மக்களை மகிழ்வித்தார். ஒவ்வொரு ஆண்டும் புரட்டாசி நவராத்திரி விழா கம்பர் செய்த ஏற்பாட்டால் இன்றும் நடைபெறக் காணுகின்றோம்.

பத்மநாபபுரம் கோட்டையிலிருந்து யானைமேல் அம்பாரி வைத்து அதில் கம்பரது சரஸ்வதி சிலையை அலங்கரித்து திருவனந்தபுரத்தில் திருவிழா வாணவேடிக்கையுடன் கோலாகலமாக நடத்தக் காணு கின்றோம். திருவனந்தபுரம் ஸ்ரீபத்மநாபன் சுவாமி ஆலயத்தின் அருகே உள்ள நவராத்திரி மண்டபத்தில் கம்பரது சரஸ்வதி சிலையை வைத்துப் பத்துநாள் விழா சிறப்பாக இன்றும் நடைபெற்று வருவ்தைக் காணுகின்றோம்.

பத்மநாபபுரத்திலிருந்து திருவனந்தபுரம் வரை வழி நெடுக மக்கள் வீடுகளையும் வீதிகளையும் அலங்கரித்துத் தீபமேற்றிக் கம்பர் சரஸ்வதி அந்தாதியைப் பாடி தரிசிப்பது வாடிக்கையாக உள்ளது.

பத்மநாபபுரம் கோட்டையில் அரண்மனையை ஒட்டிய வெளிப்பகுதியில் கம்பர் சரஸ்வதி ஆலயம் ஒன்றையும் சேர மன்னன் தாணுரவி திருப்பணி செய்து நித்திய ஏற்பாடுகளையும் செய்து அங்கும் நவராத்திரி, சரஸ்வதி பூஜை, விஜயதசமி, சிறப்பாக நடைபெறுவதைக் காணுகின்றோம். திருவனந்தபுரத்திலும், பத்மநாபபுரக் கோட்டையிலும் நவராத்திரி விழா அன்று சேரமன்னன் தாணுரவி செய்த ஏற்பாட்டால் இன்றும் சிறப்பாக நடைபெற்று வருவதை அறிகிறோம்.

கம்பருக்கு வயது எழுபதுக்கு மேல் ஆகியது. கம்பர் தேசாந்திரம் சென்று கோயில்களை எல்லாம் தரிசிக்க தனக்கு விடைதருமாறு, தாணுரவியிடம் கேட்க, அவரும் சம்மதித்தார்.

கம்பருக்குப் பல மரியாதைகளையும் செய்து, சிறப்பான விருந்து கொடுத்து, தானே தாம்பூலம் மடித்துக் கொடுத்து, கம்பரை மகிழ்வித்தார். யானை மீது அம்பாரியில் கம்பரை அமர்த்தி பதாதிகள் புடைசூழ சிறப்பு மரியாதையுடன் தாணுரவி அனுப்பி வைத்தார். வழி நெடுக கம்பர் ஆலய தரிசனமும், மக்கள் வரவேற்பையும் ஏற்று, சோழ நாட்டின் உறையூரை நோக்கி வந்தார்.

### கம்பர் உறையூர் வருகை

ஆதித்த சோழனுக்கும் வீரமா தேவிக்கும் மகனாகப் பிறந்தவன் பராந்தக சோழன். ஆதித்த சோழனுக்கும் இராஷ்டிரகூடப் பெண்ணான இளங்கோபிச்சிக்கும்

பிறந்தவர்கள் அமராவதியும், கன்னரத் தேவனும் ஆவார்கள்.

கன்னரத்தேவன் கம்பரின் மகளான காவேரியிடம் தகாதமுறையில் நடக்க எண்ணியதால் காவேரி தப்பி ஓடி கம்பங்குதிரினுள் விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டாள். கன்னரத்தேவன் ஓடிசென்று ஒளிந்தான். இராஷ்டிரகூடத்துள் இருந்த கன்னரத் தேவன் மீது படையெடுத்துச் சென்று பராந்தகன் வெற்றி பெற்றான். எனவே பராந்தகன் 'வீரசோழன்' என்ற விருது பெற்றான். பராந்தக சோழன் மேலும் பல விருதுகளைப் பெற்றவன். பராந்தகன் இருமுறை பாண்டியர்களை வென்று 'இருமடி சோழன்' என்ற விருதையும் பெற்றவன். அவன் தன் தந்தை ஆதித்த சோழன் இறந்தமையால் அவர் சமாதிமேல் 'கோர்தண்ட ராமேஸ்வரம்' என்ற ஆலயத்தையும் கட்டியவன்.

கம்பர் உறையூர் வருவதை அறிந்த சீடனாகிய பராந்தக சோழன் கம்பரை வரவேற்று உபசரித்தான். தன் தந்தை ஆதித்த சோழனுடைய இறுதி எண்ணத்தை நிறைவேற்றித் தன் குருநாதர் கம்பரைச் சோழநாட்டு அரசவைப் புலவராக இருக்கப் பணித்தான். கம்பர் சில நாட்கள் பராந்தகனுடைய அவையில் சிறப்புடன் வாழ்ந்து பின் விடை பெற்றார்.

### கம்பர் தேரழுந்தூர் வருகை

உறையூரிலிருந்து புறப்பட்ட கம்பர் தன்னை ஆதரித்து வளர்த்து பெரும்பேர் பெறச் செய்த சடையப்ப வள்ளலின் திருவெண்ணெய் நல்லூருக்கு வந்தார்.

அப்போது சடையப்ப வள்ளலின் தம்பிகள் கண்ணப்ப முதலியார், இணையார மார்பன் ஆகியவர்களைச் சந்தித்து அவர்கள் வேண்டுகோளின்படி சில நாட்கள் தங்கிப் பலரையும் கண்டு உரையாடினார். பின் ஒரு யோகியைப் போலக் கம்பர் தேரழுந்தூர் வந்தார். அதை அறிந்த மக்கள் திரண்டு வந்து உபசரித்தனர். முன்னர் கம்பரைக் கண்ணீரோடு விடைகொடுத்த மக்கள், இப்பொழுது களிப்போடு வரவேற்றனர். கம்பர் தம் மாளிகையில் வாழ்ந்து கொண்டிருந்த நாட்டாமை நல்லமுத்துவை அடைந்து நலம் விசாரித்தார். சிறிது நேரம் அங்கு தங்கிய கம்பர் பின் புறப்பட்டு ஸ்ரீ ஆமருவியப்பன் ஆலய தரிசனம் ஏற்றார். பின் அனைவரிடமும் ஆசி பெற்று தொண்டை நாடு வந்தார்.

கம்பர் காஞ்சியிலிருந்து பல இடங்களுக்கும் வருதல்

காஞ்சிபுரத்தில் சிறிது காலம் தங்கினார். பல கோவில்களுக்கும் சென்று தரிசனம் செய்தார். கம்பரைக் காணத் தமிழறிஞர்களும், புலவர்களும் வந்து இராமாயண விரிவுரை கேட்டுத் தெளிவு பெற்றனர். கம்பநாடர் என்றும் கம்ப நாட்டாழ்வார் என்றும், கவிச்சக்கரவர்த்தி என்றும் கம்பரை வாழ்த்தி, ஆசி பெற்றனர் பேரறிஞர்கள். இந்நிலையில் கம்பர் கவிச்சக்கரவர்த்திக்குரிய கௌரவங்களை எல்லாம் வெறுக்கத் தொடங்கினார். யோக நிஷ்டராய் விளங்க முற்பட்டார். யோகத்தில் அமர்ந்து தியானம் செய்தார். எளியவராய் ஆலயம் செல்வது, நண்பர்களைச் சந்திப்பது இவற்றைப் பொழுது போக்காகக் கொண்டார். பின் தக்கோலம், நென்மேலி வழியாக சோளிங்கர் வந்து

ஆலய தரிசனம் பெற்று திருவள்ளுவர், திருநின்றவூர் வழியாகச் சென்னை வந்தடைந்தார். அங்கிருந்து திருவொற்றியூர் வந்தார். அங்கு பராந்தகனின் மகன் கண்டராதித்தன் இளவரசனாக இருந்து, கம்பரை வரவேற்று உபசரித்தான்.

பின் கம்பர் செஞ்சிக்கு வந்தார். அங்கு பராந்தக சோழன் வரவேற்று உபசரித்தான். சில ஆண்டுகள் அங்கு தங்கி, கம்பர் பயணத்தைத் தொடர்ந்தார். கும்பகோணம் நாச்சியார் கோவில் தரிசனம் ஏற்றார்.

### இராமேஸ்வரம் வருதல்

பின் கால்நடையாகவே தன் பயணத்தை ஏற்று பின் இராமேஸ்வரம் வந்து சேர்ந்தார். அங்குள்ள 21 புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து வழிபட்டார். போகும் இடங்களில் எல்லாம் கம்பரை அடையாளங் கண்டவர்கள் எல்லாம் அவர் காலில் விழுந்து வணங்கினார்கள்.

### நாட்டரசன்கோட்டை வருதல் சமாதி ஆதல்

இராமேஸ்வரத்திலிருந்து புறப்பட்ட கம்பர் நாட்டரசன் கோட்டை வந்தபோது நடை தளர்ந்தது. நா உலர்ந்தது. ஓரிடம் சென்று அமர்ந்தார். மாடு மேய்க்கும் சிறுவர்கள் பக்கத்தில் வந்தனர். அவர் களிடம் குடிக்கத் தண்ணீர் கேட்டார். அவர்கள் இவ்விடத்தில் மணலைத் தோண்டினால் தண்ணீர் வரும் என்றனர். சிறுவர்களைத் தோண்டச் செய்தார். சிறுவர்கள் தோண்டித் தண்ணீரை அள்ளிக் கொடுத்தார்கள். கம்பர் நீர் பருகினார். தன் முந்தைய

நிலைகளை எல்லாமே எண்ணி அந்த நிலையில் அப்படியே சாய்ந்தார். பரமபதம் அடைந்தார். அவர் உயிர் துறந்ததைக் கண்ட சிறுவர்கள் ஓடிச் சென்று நாட்டரசன் கோட்டை மக்களிடம் தெரிவித்தார்கள். மக்கள் வந்து பார்த்தனர். அவர் தோளில் இருந்த துணியின் முடிச்சை அவிழ்த்துப் பார்த்தார்கள். இராமாயணச் சுவடிகளும், இராமேஸ்வர தீர்த்தச் சிறப்புப் பற்றிய குறிப்புச் சுவடிகளும் இருந்தன. அங்கு வாழ்ந்த தமிழறிஞர்கள் ஓலைச் சுவடிகள் குறிப்பு கண்டு இவர் கம்பரே என்று அறிந்து வியப்புற்றனர். கம்பர் பரமபதம் அடைந்தார். என்ற செய்தி எங்கும் பரவியது. கம்பர் பரமபதம் அடைந்த இடத்தில் சமாதி செய்து அதன்மீது கோயில் கட்டி கம்பனார் கோவில் எனப் பெயர் சூட்டி வழிபட ஆரம்பித்தனர்.

மக்கள் கம்பர் சமாதியில் இருந்து சிறிது மண்ணை எடுத்து நீரிலிட்டு அந்நீரைப் பிறந்த குழந்தைக்கு முதல் அமுதமாக ஊட்டி, பின்னர் தான் தாய்ப்பால் கொடுப்பது வழக்கம். அதைப் பின்பற்றியே சமாதி மண்ணைத் தாய்மார்கள் எடுத்துச் செல்வதைக் காணுகின்றோம். கி.பி.1755ம் ஆண்டில் இயற்றப் பெற்ற 'கண்ணுடைய அம்மன் பள்ளு' என்ற நூலில் கம்பர் சமாதியின் மகத்துவம் கூறப்படுவதை அறிகிறோம். 1984ல் வெளியான இந்து மித்திரன் செய்தி ஏடும் குறிப்பிடக் காணுகின்றோம்.

எங்கும் கம்பன் என்பதே பேச்சு

கம்பர் 82 வயது வரை வாழ்ந்தார். கி.பி. 922ல் கம்பர் சமாதி அடைந்தார்.

மத்தியஅரசு தனது அஞ்சல்துறையில் 05.04.1966இல் கவிச் சக்கரவர்த்தி கம்பரின் அஞ்சல் தலையை வெளியிட்டுப் பெருமை சேர்த்தது.

தேரழுந்தூர் ஸ்ரீ ஆமருவியப்பன் ஆலயத்தில் ஆண்டுதோறும் பங்குனி உத்திரம் தொடங்கி மூன்று நாட்கள் கம்பர் விழா நடப்பதை அறிகின்றோம்.

சடையப்ப வள்ளல் ஊரான திருவெண்ணெய் நல்லூரிலும் ஆண்டுதோறும் கம்பன் விழா நடைபெற்று வருகிறது.

தேரழுந்தூரில் ஒரு ஏக்கர் பரப்பளவில் கம்பர் கோட்டம் கட்டப் பெற்று 10.12.1984இல் திறப்பு விழா நடைபெற்றது.

தமிழக அரசு 01.12.1968ல் சென்னை கடற்கரையில் கம்பீரமான கம்பர் சிலையை நிறுவியுள்ளது. சேர, சோழ, பாண்டிய நாடு, தொண்டை மண்டல மெங்கும் கம்பன் தொண்டர்கள் நிறைந்துள்ளனர்.

காரைக்குடி கம்பன் கழகம் ஆண்டுதோறும் நான்கு நாட்கள் கம்பர் விழா நடத்தக் காணுகின்றோம். நான்காம்நாள் விழா கம்பர் சமாதி அடைந்த நாட்டரசன் கோட்டையில் நடைபெற அறிகிறோம். கோவை, மதுரை, புதுச்சேரி, அருப்புக்கோட்டை, விருதுநகர், விழுப்புரம், இராமேஸ்வரம் போன்ற அனைத்து ஊர்களிலும் கம்பன் கழகங்கள் பணியாற்று கின்றன.

கம்பன் தொண்டு எங்கும் பரவியுள்ளது. தமிழகம் சென்னையிலிருந்து கன்னியாகுமரி வரை எங்கும்

கம்பன் கழகங்கள் அமைந்துள்ளன. புதுச்சேரியிலும் எங்கும் கம்பன் புகழ் ஓங்கியுள்ளது.

கம்பனடிப்பொடி சா. கணேசன் அவர்கள் 45 ஆண்டுகள் ஆரம்பத்தில் தனி ஒருவராகக் காலம் தவறாது காரைக்குடியில் மட்டுமல்லாமல் பல மாநிலங்களிலும் கம்பன் கழகத்திற்குக் கிளைகள் உருவாக்கி, கம்பர் புகழ் பரப்பியுள்ளார். கம்பன் கழகங்களில் நிகழ்ச்சிகள் மட்டுமின்றி, ஆடல், பாடல் கலைநிகழ்ச்சிகளும் நடைபெறுவதை அறிகிறோம்.

கம்பனைப் பற்றிய வாழ்க்கைத் திரைப்படங்களும் உருவாகித் திரையிடப்பெற்றன. தனி ஒருவரோடு மட்டுமல்ல, அறக்கட்டளைகள் கொண்டு எங்கும் கம்பனுக்கு விழாக்கள், வேலூர் கம்பன் கழகத் தலைவர் S.N. குப்புசாமி முதலியார் கம்பன் கழகம் நடைபெறும் இடங்களில் எல்லாம் சால்வைகள் கொண்டு சென்று கம்பன் தொண்டர்களுக்குப் போர்த்தக் கண்டோம். எங்கும் கம்பன் புகழ் என்பதே பேச்சு.

கம்பர் இயற்றிய நூல்கள் 13 ஆகும். அந்நூல்களில் முதல் 9 நூல்களே கிடைக்கப் பெற்றுள்ளன.

கம்பர் இயற்றிய நூல்கள்

1. ஏரெழுபது
2. திருக்கை வழக்கம்
3. கம்பராமாயணம்
4. சடகோபர் அந்தாதி

5. திருமால் புகழ்பதிகம்
6. திவ்வியப் பிரபந்த பாசுரம்
7. சரஸ்வதி அந்தாதி
8. செம்பொற்சிலை எழுபது
9. தனிப்பாடல்கள் திரட்டு
10. மும்மணிக்கோவை
11. காஞ்சிபுராணம்
12. காஞ்சிப் பிள்ளைத் தமிழ்
13. காஞ்சி குறவஞ்சி
14. சோழர் குறவஞ்சி
15. உரைநடை ராமாயணம்
16. தமிழ் அகராதி
17. தொண்டை மண்டலசதகம்
18. இலக்குமி அந்தாதி.

அருப்புக்கோட்டை

## அருட்கவிஞர் அ. காசி பற்றிய குறிப்புகள்

இடைநிலை ஆசிரியராக 15 ஆண்டுகளும், இரண்டாம் நிலைத் தமிழாசிரியராக 7 ஆண்டுகளும், மேனிலைத் தமிழாசிரியராக 16 ஆண்டுகளும் பணிபுரிந்து 1994 ஜூலையில் பணி ஓய்வு பெற்றவர். அருட்கவிஞர் காசி இயற்றிய நூல்கள் மொத்தம் 67 ஆகும்.

பெற்ற விருதுகள் : கல்வித்தகுதி : எம்.ஏ.எம்.எட்.,

1. "கவிச்சக்கரவர்த்தி கம்பர்" — அனைத்துலக தமிழ்மன்றம் சின்னாளப்பட்டி 2001 ஜூலை.
2. ஈரோடு தமிழ்ச்சங்கப் பேரவை. 2002 "வாரியார் விருது" ஆகும்.
3. "பாரதி விருது" — மாமதுரக் கவிஞர் பேரவை. மதுரை 2003ல்
4. சாதனைச் செம்மல் விருது 2.10.2006 — ஈரோடு தமிழ்ச் சங்கப் பேரவை
5. "மரபுக் கவிதைச் சித்தர்" — விழுப்புரம் வெற்றிப் பதிப்பகம் 18.3.2007.
6. "புலவர் மணி" — வேலூர் கம்பன் கழகம் 19.8.2007.
7. இலக்கிய சாதனைச் செம்மல் — 28.3.2009 கும்பகோண மாநாட்டில் மதுரை நாடார் மகாஜன சங்கம்.

8. மாபெரும் இலக்கியச் சாதனையாளர் (முதற்சங்கு, தக்கலை)

பெற்ற பட்டங்கள்:

1. பேராசிரியர் தா. கு. சுப்பிரமணியம், எம்.ஏ., 1979ல் வழங்கிய பட்டம் "அருட்கவிஞர் காசி" (நான்கு ஆன்மீக நூலிற்காகச் செய்த சிறப்பு)
2. அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை 1992ல் எட்டயபுரத்தில் "பாரதி பணிச் செல்வர்" பட்டம் வழங்குதல்.
3. தஞ்சை இதயகீதம் இயக்கம் 1996ல் "கவியருவி" பட்டம் வழங்கல்.
4. சென்னை கவிதை சக்தி இயக்கம் 2001ல் "கவிச்சாரல்" பட்டம் வழங்கல்.
5. ஈரோடு தமிழ்ச்சங்கப் பேரவை 2000ல் "கவித்தமிழ்க் கோமகன்" பட்டம் வழங்கல்.
6. சென்னை இதய ரோஜா பதிப்பகத்தார் 2000ல் வழங்கிய பட்டம் "கவிமாமணி" என்பதாகும்.
7. உடுமலைப்பேட்டை பாவலரேறு 2010ல் "அருட்பாவலர்" பட்டமளித்தல்.

# அருட்கவிஞர் அ. காசி இயற்றிய நூல்கள்

1. காமராசர் வெண்பாப்பத்து *(1979)*
2. அனவரத செல்வவிநாயகர் பதிகம் *(1979)*
3. இன்சுவை விருந்து இருபது *(1979)*
4. பழனியாண்டவர் பதிகம்
5. வாலசுப்பிரமணியர் பதிகம் *(1979)*
6. அமுதவல்லியம்மன் பதிகம் *(1979)*
7. ஏனாதிநாதர் பதிகம் *(1980)*
8. வரதராசப் பெருமாள் பதிகமும், மாலையும்
9. பத்திரகாளியம்மன் *(1981)*
10. விநாயகர் விடு தூது *(1981)*
11. ஆஞ்சனேயர் பதிகமும். நவக்கிரக தோத்திரமும் *(1981)*
12. பூவெம்பாவை
13. கிளி விடு தூது *(1981)*
14. மாரியைப் பணிகுவம் *(1982)*
15. ஆஞ்சநேயர் கவசம்
16. அருள்மிகு பாலசண்முகர் பதிகம்
17. திருநல்லூர் முத்துக்குமாரசுவாமிப் பாமாலை *(9-6-84)*

18. ஸ்ரீ சாரதா தேவியார் அந்தாதி (1985)
19. ஸ்ரீ ஐயப்ப சுவாமி (2-6-1985)
20. சிவகாசி ஸ்ரீ அண்ணாமலையார் (1986)
21. ஸ்ரீ மகா்லட்சுமி & ஸ்ரீ மகாசரஸ்வதி (1988)
39. கவிச்சுவையமுது (1995) — நியு புக்ஸ்டால் அருப்புக் கோட்டை
43. நமக்குத் தொழில் கவிதை —புதுமலர்ப் புத்தகாலயம்
44. வள்ளலார் வாழ்வும் மும்மந்திரமும் (2001) — இதயரோஜா பதிப்பகம்
45. வள்ளுவர் வழங்கும் மருந்து —சுவாதி பதிப்பகம்
46. குறளமிழ்தத்தில் சிலதுளிகள் (2001) — மணிமேகலை பிரசுரம்
47. பெண்மையைப் போற்றுவோம் (2001) — மணிமேகலை பிரசுரம்
48. பெருந்தலைவர் காமராசரும் நடிகர் திலகம் சிவாஜி கணேசனும் (2002) — மணிமேகலை பிரசுரம்
49. சுவாமி விவேகானந்தரும் மும்மந்திரமும் — சித்ரா பதிப்பகம்
50. கவிச்சக்கரவர்த்தி கம்பர் கவிநயம் — மணிமேகலை பிரசுரம்
51. வால்மீகிக்கு வளம் தந்த கம்பர் — புதுமலர்ப்புத்தகாலயம்
52. மகாகவி பாரதி அந்தாதி (2004) — இதயரோஜா பதிப்பகம்

53. கம்பர் வரலாற்றில் கவினுறு நிகழ்ச்சிகள் (2003) — வனிதா பதிப்பகம்
54. கம்பரைப் போற்றும் மகாகவி பாரதி (2005) — மணிமேகலை பிரசுரம்
55. கம்பன் உலக மகாகவி (2005) — வேலூர் கம்பன் பதிப்பகம்
56. சடகோபர் அந்தாதி — நூல் நயம் — சுவாதி பதிப்பகம்
57. கவிச்சக்கரவர்த்தி கம்பரின் திருக்கை வழக்கம் (2007) — வேலூர் கம்பன் பதிப்பகம்
58. சைவ அருளாளர் சுந்தரர் வாழ்வும் வாக்கும் (2006) — மணிமேகலை பிரசுரம்
59. கம்பரும் திருத்தக்க தேவரும் (2006) — தமிழ்ச்சோலை பதிப்பகம், சென்னை — 33
60. அடலேறு ஊ.பு.அ. சௌந்திர பாண்டியனார் வாழ்வும் — இரட்டை அந்தாதியும் (2008) — நாடார் மஹாஜனசங்கம் பதிப்பு, மதுரை
61. கம்பராமாயணத்தில் விதியும் ஊழ்வினையும் (2008) — கம்பன் பதிப்பகம், வேலூர்
62. நலமுடன் வாழ நல்வழிகள் (2009) — மணிமேகலை பிரசுரம், சென்னை
63. கம்பனடிப் பொடியாரின் நுண்ணாற்றலும் மண்டோதரியின் மாண்பாற்றலும் — (2009) — வேலூர் கம்பன் பதிப்பகம்
64. ஔவையாரின் ஆற்றலும் சங்கப் புலவர்களின் மாண்பும் — 2009 (அச்சில்) — மணிமேகலை பிரசுரம், சென்னை

65. மகாகவி காளிதாசர் வாழ்வும் படைப்பாற்றலின் மாண்பும் — *2009* — தமிழ்ச்சோலை பதிப்பகம், சென்னை

66. கவிச்சக்கரவர்த்தியும் கம்பவள்ளலும் *7.5.2010* புதுவையில் — வேலூர் கம்பன் பதிப்பகம், வேலூர்

67. கவி காளமேகப்புலவரும், ஆசுகவித் திருவிளை யாடல்களும் *(அச்சில்)* — இதய ரோஜா பதிப்பகம், சென்னை




அருட்கவிஞர் **அ.காசி** அவர்களுக்கு.
**புத்தகங்களின் அரசர்** என்ற விருது வழங்கப்பட்ட விழா.

அருட்கவிஞர் **அ.காசி** இயற்றிய
கம்பரைப் பற்றிய ஒன்பது நூல்கள்













